# ராஜாஜி

# நூற்றாண்டு விழா மலர்






திருநெல்வேலி

1978



# அமரர் ராஜாஜி நூற்றாண்டு விழா மலர்.

திருநெல்வேலி



1978 டிசம்பர் 30, 31

## மலர் கமிட்டி

R. S. நல்லபெருமாள், B. A. B. L.

M. S. ஜவஹர்லால், B. A. B. L.

A. S. வேதாந்தம்

ஹாஜி. T. E. S. பத்ஹூர் ரபானி

V, T. ரங்கநாதன்

T. S. சைலப்பன்

K. S. சங்கரசுப்பிரமணியம், M. A.

T. R. சங்கரநாராயணன்

V. S. வேங்கடாச்சாரி.

Edited by : V. S. Venkatachary, Published by : T. R. Sankaranarayanan.
on Behalf Tirunelveli Rajaji Centenary Committee.
Associate Editor : R. S. Nallaperumal, B. A. B. L.
Printed by : Saravana Printers, Tirunelveli Jn.

# பொருளடக்கம்

**விழாக் குழு**

திரு. V. S வெங்கடாச்சாரி
,, T. R. சங்கரநாராயணன்
,, M. சுப்பிரமண்யம், அரியநாயகிபுரம்
,, T. S. சைலப்பன்
,, T. S A. சண்முகவேல், B. C ம.
,, A. S. வேதாந்தம்
,, மதுரநாயகம்
,, தேவதாஸ்
,, K. S. சங்கரசுப்பிரமணியம், M A.
,, S தங்கம் பிள்ளை
,, நெல்லையாளன்
,, சேர்வைக்காரன் சுப்பையா, B. E.
,, G. சின்னசாமி, B A. B. L.
,, V. ரங்கநாதன்
,, M. S. ஜவஹர்லால்
,, பழநி சுவாமிநாதன்
,, ராமசாமி ரெட்டியார்
,, S. S. ராஜலிங்கராஜா



# ராஜாஜி நூற்றுண்டு விழா குழு

## நிர்வாகஸ்தர்கள்

திரு. வி. எஸ். வேங்கடாச்சாரி,
(விட்டலபுரம்)
தலைவர் & பொருளாளர்.

**போஷகர்கள்**

திரு K. A. A. சங்கரலிங்க நாடார், பெருமாள்புரம் (பாளை)
,, S. கல்யாணசுந்தரம் பிள்ளை, பாளையங்கோட்டை
,, K. S. கிருஷ்ணமூர்த்தி, கைலாசபுரம், திருநெவேலி ஜங்.
,, A. P. C. வீரபாகு, தூத்துக்குடி
,, M. வெங்கிடக் கிருஷ்ணன், தூத்துக்குடி
,, K. E. S. எல்லப்பன், கோவில்பட்டி
,, T. V. ராமசுப்பய்யர், வண்ணார்பேட்டை
,, T. D. அருணாசலம், M. A. இலஞ்சி
,, D. S. A. சிவப்பிரகாசம், EX. M. L. A. முக்கூடல்
,, T. S. ஆறுமுக முதலியார், சங்கரன்கோவில்

**துணைத் தலைவர்கள்**

திரு. நெல்லை ஜெபமணி, M. L. A., குரங்கணி
,, R. S. ஆறுமுகம், EX. M. P., திருநெல்வேலி ஜங்ஷன்
,, A. S. வேதாந்தம், திருநெல்வேலி ஜங்ஷன்
,, S. S. ராஜலிங்கராஜா. அம்பை
,, N. சௌந்திரபாண்டியன், EX. M. L. A. செட்டிகுளம்
,, M. சுப்பிரமணியம், அரியநாயகிபுரம்
,, K. S. சங்கரசுப்பிரமணியம், M. A. கல்லிடைக்குறிச்சி
,, சேர்வைக்காரன் சுப்பையா, B. E. பாளையங்கோட்டை

**பொதுச் செயலாளர்**

திரு. T. R. சங்கரநாராயணன், பாளையங்கோட்டை

**செயலாளர்கள்**

திரு. T. S. சைலப்பன், திருநெல்வேலி டவுண்
,, G. S. மதுரநாயகம், பாளையங்கோட்டை
,, V. பொன்னையா, ஸ்ரீவைகுண்டம்
,, S. தங்கவேல், கல்லிடைக்குறிச்சி
,, M. S. ஜவஹர்லால், M. A B. L. பாளையங்கோட்டை
,, G. சின்னச்சாமி, B. A. B. L. தூத்துக்குடி
,, T. S. A. சண்முகவேல், B Com., சங்கரன்கோவில்
,, G. லிங்கப்பா, திருநெல்வேலி ஜங்ஷன்

# சமர்ப்பணம்



சில உண்மைகள் கற்பனைக்கதைகளைவிட வியப்பூட்டக்கூடியவைகளாக இருப்பதுண்டு. ராஜாஜியும் அவருடைய வாழ்க்கையும் அவ்விதம் வியப்பூட்டக் கூடியவை தாம், இப்படி ஒருவர் இருந்திருப்பாரா, இப்படியெல்லாம் ஒருவர் வாழ்ந்திருக்க முடியுமா என்று நம்ப முடியாமல் இன்றையத் தலைமுறையினர் வியந்து கேட்கும்படியான ஓர் அபூர்வ மனிதர்தாம் ராஜாஜி அவர்கள்.

ராஜாஜி, இரண்டு நூற்றாண்டுகளின் பிரதிநிதி 19ம் நூற்றாண்டில் பிறந்து 20ம் நூற்றாண்டில் மறைந்தவர், ராஜாஜி ஒரு மனிதர், ஒரு சரித்திரம், கர்மயோகி, இலக்கியகர்த்தா, ராஜரிஷி மொத்தத்தில் எத்தனையோ துறைகளில் அவர் ஒரு சக்ரவர்த்தி. குடிசை வாழ்க்கையிலிருந்து அரண்மனை வாழ்க்கை வரை வாழ்ந்து காட்டிய அற்புத மனிதர். குடிசை வாழ்வில் சலிப்போ, அரண்மனை வாழ்வில் அகம்பாவமோ கொள்ளாத தூய மனிதர்.

வரலாறு படைத்த மகா புருஷரான ராஜாஜியின் நூற்றாண்டு விழாவில், நெல்லை மாவட்ட ராஜாஜி நூற்றாண்டு விழாக்குழுவினர் இம்மலரை ராஜாஜியின் நினைவாக அன்னாருக்கு வணக்கத்துடன் சமர்ப்பிக்கிறோம்.

**நெல்லை மாவட்ட**

**ராஜாஜி நூற்றாண்டு விழாக்குழுவினர்**

# விடுதலை வரலாற்றை நினைவூட்டும் படம்



வித்தல்பாய்பட்டேல் - அலிசகோதரர்கள் - டாக்டர் அன்சாரி - மோதிலால் நேரு - கஸ்தூரிரங்கய்யங்கார்
இவர்களுடன் ராஜாஜி (இடமிருந்து இரண்டாவதாக நிற்பவர்)



RASHTRAPATI BHAVAN,
NEW DELHI,
INDIA.

December 2, 1978.

I am glad to know that nation-wide celebrations of the birth centenary of Shri C. Rajagopalachari are being organised on December 10.

Rajaji was an outstanding statesman of our times. Early in life he distinguished himself for his public spirit, political acumen and integrity. He made significant contribution both before and after independence for the enrichment of our national life. He was one of the close associates of Mahatma Gandhi and yet he had the courage to differ with him at times. Inspite of his erudition, he was extremely modest and affable by nature. I have no doubt that Rajaji's illustrious life of service and sacrifice will continue to inspire generations to come.

I pay my respectful tribute to the memory of this great son of India and send my best wishes for the success of the Birth Centenary Celebrations.

*N. Sanjiva Reddy*



RAJ BHAVAN
MADRAS-600 022
31—10—1978

## MESSAGE

I am glad to know a special committee has arranged Rajaji Centenary Celebration in Tirunelveli District. Rajaji, like Mahatma Gandhi, was a saint among politicians. It was Rajaji, who introduced prohibition for the first time in India. With his foresight and farsightedness, he gave shape to many of the ideals propounded by Mahatma Gandhi. He never cared for any office and he was bold and forthright in the expression of his views. He never minced matters and called a spade, spade. With his wonderful clarity of thought, he could convince even his opponents of the necessity of whatever he did. His literary output was remarkable. Let us follow the footsteps of Rajaji as we build the India of Gandhiji's dreams.

*Prabhudas B. Patwari*
GOVERNOR OF TAMIL NADU

*M. Bhaktavatsalam*
**Ex. Chief Minister**
**Govt. of Tamilnadu.**

Phone : 71243
48, Warren Road
MADRAS-600 004

13—11—78

தங்கள் கடிதம் கிடைத்தது. ராஜாஜி விழாவினை திருநெல்வேலியில் கொண்டாட ஏற்பாடு செய்திருப்பதுப்பற்றி மகிழ்ச்சி. அதனை ஒட்டி வெளியிடும் மலர் வசீகரமாகவும், அறிவூட்டக்கூடியதாகவும் இருக்கும் என்று நம்புகிறேன். மூதறிஞர் ராஜாஜி தமிழ் நாட்டுக்கும் தமிழருக்கும் அரிய சேவை புரிந்திருக்கிறார். நாட்டு நிர்வாகம் எப்படி இருக்கவேண்டும் என்று அவரே நடத்திக் காட்டியிருக்கிறார். காந்திஜியோடு அவர் சில சமயங்களில் மாறுபட்ட கருத்துக் கொண்டிருந்த போதிலும் காந்திஜி அவரிடம் எப்பொழுதும் நன்கு மதிப்புக்கொண்டிருந்தார். ராஜாஜியின் சமயப்பற்று வெளிப்படையாக தெரியவில்லை. என்றாலும் அவருக்கு இறைவன் இடத்தில் நம்பிக்கையும், ஆன்மிகப்போக்கும் எப்பொழுதும் இருந்து வந்தது.

ராஜாஜியின் நூற்றாண்டு விழாவினை சிறப்பாக கொண்டாட என் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

**எம். பக்தவத்ஸலம்.**

1011

**R. SHUNMUGHAM,** I. A. S.,
COLLECTOR.




TIRUNELVELI
16—12—78

**அன்பார்ந்த வேங்கடாச்சாரி,**

தாங்கள் 7—12—78 நாளிட்ட கடிதம் கிடைக்கப் பெற்றேன். மூதறிஞர் இராஜாஜி நூற்றாண்டு விழா விணையொட்டி நினைவு மலரொன்று வெளியிடஇருப்பது அறிந்து மகிழ்கிறேன். திட சிந்தனை, தீர்க்க தரிசனம், நிர்வாகத்திறன் ஆகியன ஒருங்கே அமையப்பெற்ற அன்னாருக்கு விழா எடுக்கும் சீரிய பணியினை மேற் கொள்வதன் மூலம் அவரது நற்பண்புகளையும், சிறந்த கொள்கைகளையும், அனைவரும் பின்பற்றச் செய்ய இயலும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள் கிறேன். விழா இனிதே நடைபெற என் வாழ்த்துக்கள்.

தங்கள் அன்பார்ந்த.

**ரா. சண்முகம்.**

# பத்தரை மாற்றுத் தங்கம்

ரசிகமணி டி. கே. சி.

பத்தரை மாற்றுத் தங்கத்தை வாங்கிக்கொடுப்போம். அதை அடை கல்மேல் வைத்துக் கொண்டு தட்டார்கள் என்னபாடு படுத்துவார்கள் என்பது நமக்குத் தெரியும். சுத்தியலால் இப்படி அடிப்பார்கள், அப்படி அடிப்பார்கள் இடை இடையே உலையில் காயவைத்து மறுபடியும் மறுபடியும் தட்டுவார்கள். துவைச்சல் கொடுப்பதற்காக அவ்வளவும் செய்தால்தான் தங்கம், தங்கப் பணிக்குதவும்.

இயற்கைக்கு ஒரு நல்ல ஆன்மா கிடைத்துவிட்டால் சரி; நல்ல பணிக்கு உதவும் என்று எண்ண ஆரம்பித்து விடுகிறது அது. அந்த ஆன்மாவை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

ராஜாஜி கிடைத்தார்கள் அவர்களை இயற்கை என்ன எல்லாம் செய்தது என்று பார்க்கலாம்.

நல்ல பண்பாடுள்ள பக்தி சிரத்தையுள்ள, குடும்பத்தில் ராஜாஜி பிறந்தார்கள். இயற்கையானது தட்டார வேலை செய்ய ஆரம்பித்தது.

உடம்பை பலஹீனமாக ஆக்கியது! அதோடு கண்ணை அதிக பலஹீனமாக ஆக்கிவிட்டது.

பிள்ளையைப் பள்ளிக் கூடத்தில் போட்டார்கள். 'ஷார்ட் சைட்' (Short sight)காரணமாக உபாத்தியாயர் பிளாக் போர்டில் எழுதும் எழுத்தோ கணக்கோ ஒன்றும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. விஷயத்தையும் கணக்கையும், தானே யோசனை செய்து தெரிந்துகொள்ள வேண்டியதாயிற்று. ஆனால்உண்மையை நேருக்கு நேர் பார்க்க முடிந்தது.

உண்மைக்கும் ராஜாஜிக்கும் இடையே உபாத்தியாயர்கள் நிற்கவில்லை, பள்ளிக்கூடமும் நிற்கவில்லை.

எப்போது உபாத்தியாயரும் பள்ளிக்கூடமும் வந்து இடையூறு செய்யவில்லையோ அப்போது அறிவுத்தத்துவம் உத்ஸாகமாக வேலை செய்யத்தானே வேண்டும்? புஸ்தகமும் வார்த்தையும் உபாத்தியாயரும் கண்ணுக்குத் தெரியாமல் ஒதுங்கி விட்டபடியால், பாடங்களில் உள்ள விஷயங்கள் யாதொரு கஷ்டமும் இல்லாமல் புலப்படலாயின.

மற்றப் பிள்ளைகளுக்கு — அதாவது நல்ல பார்வையுள்ள பிள்ளைகளுக்கு — உண்மை புலப்படுவதில்லை. உலகமே வார்த்தைகள், பாட புஸ்தகங்கள், உற்பத்தியாளர்கள் என்பதாகக் காட்சி அளிக்கிறது. பிறகு அறிவுத் தத்துவத்துக்கு அங்கே வேலை ஏது?

ராஜாஜி, சேலத்தில் வக்கீல் வேலை பார்த்து வந்தார்கள். அபூர்வமான திறமையுடனும் தெளிவுடனும் வழக்குகளை எடுத்து விளக்குவதன் காரணமாகச் சேலம் ஜில்லா மாத்திரம் அல்லாமல் சுற்று வட்டாரத்திலுள்ள ஜில்லாக்களில் எல்லாமே பெரிய வழக்கு என்றால் ராஜாஜிதான் வக்கீல் என்று ஆகிவிட்டது. (அந்தக் காலத்தில் ராஜாஜி என்று பெயர் ஏற்படவில்லை. ஸி. ராஜகோபாலாச்சாரியார் என்று சொன்னார்கள்.

அப்படியெல்லாம் மகோன்னத தசையில் இருந்தபோது, உடம்பில் நூதனமான ஒரு பலஹீனம் உண்டாயிற்று. ஆனால் அது ஒரு காரியம் அல்ல. உள்ளத்தில் உண்டான துன்பம் தான் பெரியது. ஏழை மக்கள் படும் கஷ்டத்தைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. போதாக்குறைக்குக் காந்திஜீயின் கருணை வெள்ளமும் அந்த உள்ளத்தில் வந்து பாய்ந்தது. அவ்வளவு தான்; வக்கீல் வேலையை விட்டொழிக்கலாயிற்று.

பிரிட்டிஷ் சர்க்கார் தேசத்துக்குச் செய்துள்ள கொடுமை மனசைப்பிடுங்கித் தின்ன ஆரம்பித்தது. ஜெயிலுக்கும் போக வேண்டியதாயிற்று.

உடம்பு என்ன தொந்தரவு செய்து கொண்டிருந்தால் என்ன, குடும்பக் கவலைகள் மனசை வாட்டிக் கொண்டிருந்தால் என்ன, போய்த் தீரவேண்டியது தான் ஜெயிலுக்கு.

ராஜாஜிகள் தமிழ்நாட்டில் பூர்வத்திலும் இருந்திருக்கிறார்கள். இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு அவர்கள் வளமாய் இருந்திருப்பார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்குத் திருவள்ளுவர் வாய் மொழியில் சான்று இருக்கிறது.

புடம் வைக்கப் பொன் நன்றாகப் பிரகாசிக்கும் காலத்தைத் திருவள்ளுவர் பார்த்திருக்கிறார்.

உயர்ந்த லட்சியங்களில் கருத்தை வைத்துச் சாதனம் செய்கிறவர்களுடைய (நோற்கிற்பவர்) உள்ளத்தைப் புடம் போடுவது எப்படி என்பதையும் அறிந்திருக்கிறார். இரண்டையும் ஒப்பிட்டுத் திருவள்ளுவர் சொல்கிறார்.

''சுடச்சுடரும் பொன்போல் -
ஒளிவிடும், துன்பம்
சுடச்சுட நோற்கிற்
பவர்க்கு''

[சுட = புடம் போட; சுடரும் = பிரகாசிக்கும், மாற்று உளரும்; பொன் போல் - தங்கத்தைப் போல்; ஒளி

விடும் = உண்மைகள் பிரகாசிக்கும்; துன்பம் சுடச்சுட = துன்பத்தில் வைத்துப் புடம் போடப் போட, நோற்கிற்பவர்க்கு = உயர்ந்த லக்ஷியத்துக்காகச் சாதனத்தை மேற்கொள்பவர்களுக்கு]

துன்பத்தின் மூலமாக அரிய ஆழமான உண்மைகள் உள்ளத்தில் பிரகாசிக்கும் என்று திருவள்ளுவர் சொன்னார். அந்தச் சொல்லுக்கு வியாக்கியானம் வேண்டாமா? அதுதான் ராஜாஜி!



## சுதந்திரம் எப்படி இருக்கும்?

சுயராஜ்யம் என்பது உடனடியாக ஏன் பல வருஷங்களுக்கு நல்லாட்சியாக இருக்க முடியாது. மக்களுக்கு அதனால் மகிழ்ச்சி ஏற்படாது. தேர்தல்கள், அதனால் ஏற்படும் ஊழல்கள், அநீதி, நிர்வாகத் திறமையின்மை ஆகியவை மக்களின் வாழ்க்கையை நரகமாக்கிவிடும். சுதந்திரம் கிடைத்தவுடன் இதுதான் நிலைமை. பழைய ஆட்சியே இருக்கலாகாதா, நேர்மையான, திறமையான ஆட்சி இருக்காதா என்று மக்கள் வருந்துவர். சுதந்திரத்தினால் ஏற்படக்கூடிய ஒரே லாபம் இந்திய சமுதாயம், அடிமை விலங்கிலிருந்து நீங்கி கௌரவம் காப்பாற்றப்படும் என்பது தான்.

குழந்தைப் பருவத்திலேயே நல்ல கல்வி புகட்டப்பட்டு நன்னடத்தை தெய்வபக்தி அன்பு உணர்ச்சி ஆகியவை ஊட்டப் படவேண்டும். இல்லாவிடில் அநீதியும் பணக்கொடுமையும் தான் காணப்படும். பிறரை நேசிக்கும் மனப்பான்மை எல்லா மக்கள் இடையேயும் ஏற்பட்டால் உலகம் வாழ்வதற்கு மிகவும் நன்றாக இருக்கும். ஆனால் இந்த லட்சியம் இதர நாடுகளை விட இந்தியாவில் கைகூடும் என்று நம்பலாம்.

[1922-ல் எழுதிய 'ஜெயில் டைரி'யிலிருந்து]

## அரியாசனத்தில்

# ஜனகமகாராஜர்

பேராசிரியர் கல்கி

சங்க நிதிபதும நிதிகளுக்கும் உரியவளும், காமதேனுவையும் கற்பக விருட்சத்தையும் அளித்தவளும், சகல புவனங்களிலும் உள்ள சகலவிதமான ஐசுவரியங்களின் தனி நாயகியுமான செல்வத் திருமகள் - மகாலட்சுமி - ஸ்ரீதேவி - ஒரு சமயம் பூவுலகில் மானிட வடிவந்தரிக்க உளங்கொண்டாள். மனித குலத்தில் எந்த பாக்கியவானுடைய புதல்வியாகப் பிறக்கலாம் என்று சிந்தனை செய்தாள். உலகத்து மாந்தர் கேவலம் கொஞ்சம் பணம் சேர்ந்தவுடனேயே கர்வங் கொண்டு விநயத்தை இழந்து அழிவைத் தேடிக்கொள்கிறார்களே, அப்படியிருக்கச் சகல செல்வங்களுக்கும் உரியவளான தன்னைப் புதல்வியாக அடைந்து கர்வங் கொள்ளாமலிருக்கக் கூடிய மனிதன் யார் என்று ஆராய்ந்தாள். முனிவர்கள், ரிஷிகள் - தபஸ்விகள் கோஷ்டியில் அத்தகைய மனிதரைத் தேடினாள். பெருஞ் செல்வம் படைத்த பிரபுக்களிடையில் தேடினாள். எங்கும் அத்தகைய மனிதர் ஒருவரைக் காணமுடியவில்லை.

கடைசியில் இராஜகுலத்தில் பிறந்தவர்களிடையிலே ஒருவேளை அத்தகைய மனிதர் இருக்கலாமோ என்று தேடிப் பார்த்தாள். தேடிய மனிதரைக் கண்டு பிடித்தாள். மிதிலாபுரியின் மன்னராகிய ஜனக மகாராஜரைக் கண்டதும், "இவர்தான் நம்மை மகளாகப் பெறுவதற்குரியவர்" என்று அறிந்தாள். "இராஜ போகத்தினாலும் இராஜ்யாதிகாரத்தினாலும் மனங்கலங்காத மனிதர் இவர். எத்தகைய செல்வங்களும் சம்பத்துக்களும் இவருடைய வைராக்கியத்தைக் குலைக்க முடியாது. மகாலக்ஷ்மியை மகளாகப் பெற்றாலும் இவருடைய உள்ளத் தூய்மைக்குப் பங்கம் நேராது!" என்று முடிவு செய்து ஸ்ரீதேவியானவள் மிதிலாபுரியில் ஜனக மகாராஜருடைய திருப்புதல்வியாக அவதரித்தாள். சீதை என்றும், மைதிலி என்றும், ஜானகி என்றும் பெயர் பெற்றாள்.

அந்த நாள் முதல் இன்று வரையில் பெருஞ்செல்வத்தினிடையே திடவைராக்கியத்துடன் வாழக்கூடிய மகான்களுக்கு ஜனகமகாராஜரை உதாரணமாகச் சொல்வது பாரத நாட்டில் வழக்கமாயிருந்து வருகிறது.

புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் நம்மிடையே தென் பகுதியில் தெய்வத் தமிழகத்தில் பிறந்த புண்ணியர் அவர். அரண்மனை வாழ்வையும் ஆசிரமக்குடிசையையும் ஒன்ருகக் கருதுகிறவர். சுகத்தையும் துக்கத்தையும் சமமாக எண்ணுகிறவர். போற்றுதலினுல் பூரிப்பதில்லை; அவை தேடிவரும்போது பயந்து ஒதுங்குவதுமில்லை. தாமரை இலை மீதுள்ள பனித்துளியைப் போல எந்தவிதப் பதவியையும் வகிக்கக்கூடியவர். வகித்து நடத்திய பதவி தம்மை விட்டுப்போனுல் சிறிதும் சஞ்சலம் அடையாதவர்.

நண்பருக்கு நண்பர் அவர். எதிரிகளுக்கும் அவர் நண்பர்! நம் காலத்தில் 'அஜாத சத்ரு' என்று சொல்லக்கூடிய சாத்வீக புருஷர். அவரைச் சிலர் தங்களுக்கு எதிரியென்றும் விரோதி என்றும் எண்ணுதல் கூடும். ஆனுல் அவர் இந்தப் பூவுலகில் பிறந்த யாரையும் தன் எதிரியாகவோ விரோதியாகவோ எண்ணுவது கிடையாது.

"நிலையிற்றிரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மானப் பெரிது"

என்று தமிழ் மறைதந்த பொய்யாமொழிப் புலவர் வாக்கை இன்று நம்கண் எதிரே மெய்யாக்கி வருகிறவர். அவர் யார் என்று சொல்லவும் வேண்டுமா? நம் அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள் தான்.

இந்தியா தேசமே பார்த்து வியக்கும் ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக இரண்டு வருஷம் பதவி வகித்தார். பதவியைத் துறக்கவேண்டிய காலம் வந்தது. "பதவியைத்தான் விடப்போகிருேமே? எது எப்படிப் போனுல் என்ன? என்று கைக்கு வந்திருந்த ஆபீஸ் 'பைல்' களையெல்லாம் அப்படியே கட்டோடு திருப்பி அனுப்பி விட்டாரா? கிடையாது. இரவும் பகலும் தினம் இருபது மணி நேரம் வீதம் நாலு நாள் இடைவிடாது வேலை செய்தார். பைசல் செய்த பைல்களை சர்க்கார் வாங்கிக் கொடுத்திருந்த காரில் ஏற்றி வில்லைச் சேவகனையும் ராஜினுமாவையும் கூட அனுப்பினுர்.

அனுப்பிய அடுத்த நிமிஷம் என்ன செய்தார் என்று நினைக்கிறீர்கள்?

தமிழ் அகராதியை எடுத்து வைத்துக் கொண்டு, ஆங்கிலத்திலுள்ள விஞ்ஞானச் சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச்சொல் கண்டு பிடிக்கும் வேலையில் ஈடுபட்டார்.

பதவியை ராஜினுமா செய்ததற்கும் சிறை புகுந்ததற்கும் இடையில் மூன்று தினங்கள் இருந்தன. இந்த மூன்று தினங்களிலும் எத்தனை எத்தனையோ பேர் அவரைப் பார்க்க வந்தார்கள், என்னென்னவோ சொன்னுர்கள். சிலர் ஆறுதல் கூறினுர்கள்; சிலர் துக்கம் விசாரித்தார்கள்; சிலர் அவரைப் போற்றிப் பாராட்டினுர்கள்.

அதையெல்லாம் ராஜாஜி ஒரு காதால் வாங்கி இன்னெரு காதால் விட்டுக் கொண்டிருந்தார். வந்தவர்கள் போனவுடன் மறுபடியும் தமிழ் அகராதியைப் புரட்டத் தொடங்கினுர்! அவருடைய உள்ளம் நிம்மதியும் சாந்தமும் பெற்றுச் சமநிலையில் நின்றது.

ராஜாஜி பிரதம மந்திரி பதவி வகித்ததால் பிரதம மந்திரி பதவி உயர்வு பெற்றது. அம்மாதிரியே அவர் கவர்னர் உத்தியோகம் பார்த்த காரணத்தினுல் கவர்னர் பதவியும் உயர்வு அடைந்தது!

சென்ற 1947ஆம் வருஷம் ஆகஸ்ட்டு 15-ஆம் தேதி இந்தியா பூரண சுதந்திர ஆட்சி அடைந்தபோது, ராஜாஜி மேற்கு வங்காளத்தின் கவர்னர் பதவியை ஏற்கும்படி நேர்ந்தது.

அதற்கு ஒரு வருஷத்திற்கு முன்னல் 1946 ஆகஸ்டில் கல்கத்தா நகரிலேதான் சமூகத் துவேஷப் படுகொலைப் பேய் தன்னுடைய கோர பயங்கர தாண்டவத்தை முதன் முதலாக ஆரம்பித்தது.

எனவே 1947 ஆகஸ்டு 15உ கல்கத்தாவில் என்ன நேரிடுமோ என்று அனைவரும் கலக்கமுற்ருர்கள்.

"ஐயையோ! கல்கத்தாவுக்கா போகிறீர்கள்? ரொம்பத் தொல்லையாயிற்றே" என்ருர்கள்.

தொல்லை என்ருல் யாராவது ஒருவர் அதைத் தாங்கித்தானே ஆகவேண்டும்? என் முதுகிலேயே சுமந்து பார்க்கிறேன்!" என்ருர் ராஜாஜி

ஸ்ரீசரத் போஸின் கோஷ்டியார் சிலர் "ராஜாஜி வேண்டாம்; திரும்பிச் செல்க!" என்ருர்கள்.

"ஆகட்டும், ஆகட்டும்! வந்த வேலை முடிந்ததும் திரும்பிச் செல்லத்தான் போகிறேன்!" என்ருர் ராஜாஜி

ராஜாஜி கல்கத்தாவுக்கு சென்ற வேளை நல்ல வேளை; பலர் எதிர்பார்த்தபடி அங்கு சமூக பயங்கரக் கலகங்கள் நடைபெறவில்லை. யாரும் எதிர்பாராத முறையில் ஹிந்து முஸ்லிம் சகோதர பாவம் தோன்றி வளர்ந்து வந்தது.

ராஜாஜி கல்கத்தாவுக்கு வந்த மறு தினமே "ராஜாஜி வேண்டாம்" என்ற கோஷத்துக்குப் பதில் "ராஜாஜிக்கு ஜே" என்ற கோஷம் கிளம்பிற்று. அந்த கோஷம் நாளுக்கு நாள் வளர்ந்து வலுப்பெற்று வந்தது.

ராஜாஜி மேற்கு வங்காள கவர்னராக இருந்த பத்துமாத காலத்தில் வங்க மக்களிடையே தேசபந்து தாஸையும் நேதாஜி போஸையும் போன்ற அன்பும் போற்றுதலும் பெற்ருர்.

அரசியல் உலகத்தில் இத்தகைய ஓர் அற்புதம் நடந்ததை நம் கண்முன்னல் கண்டு மகிழ்ந்தோம்.

இந்த 1948 ஜுன் மாதம் 21உ யன்று ராஜாஜியினுல் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி உயர்வு பெறப்போகிறது! இதற்கு மேல் உயர்வதற்கு இல்லையென்று ராஜாஜியின் பதவிக்காலத்தோடு அது முடிந்து விடவும் போகிறது!

சென்ற வருஷம் ஆகஸ்டு 15உ வரையில் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி மிகப்பொல்லாத பதவியாயிருந்தது. உலகத்திலேயே சுக போகத்துக்கும் சர்வாதிகாரத்துக்கும் இணையற்ற பதவியாயிருந்தது.

இந்தியா தேசத்தின் முப்பத்தெட்டு கோடி மக்களுடைய வாழ்வை நிர்ணயிக்கும் யதேச்சாதிகாரம் கவர்னர் ஜெனரலுக்கு இருந்தது. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலம் முதல் ஜெனரல் வேவல் காலம் வரையில் பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரல்மார்கள் பிரிட்டிஷாரின் நன்மைக்காக இந்தியாவைச் சுரண்டுவதற்காகவே தங்கள் அதிகாரத்தைப்பிரயோகித்து வந்தார்கள். அந்த நோக்கத்துக்காக அவர்கள் கையாண்ட அடக்குமுறைகளின் பயங்கரக்கொடுமைகளை நாமே நேரில் பார்த்திருக்கிரோம்; அனுபவித்து மிருக்கிரோம்.

அத்தகைய கவர்னர் ஜெனரல் பதவிக்கு ராஜாஜி வரப்போகிருர். உலகத்திலேயே மிகப்பெரிய அரண்மனைகளில் ஒன்றில் வசிக்கப் போகிருர்.

"நெருப்பு அணைக்கும்போது சில சமயம் புகை உண்டாகுமல்லவா? அணைந்து போன பிரிட்டிஷ் ஆட்சி விட்டுச் செல்லும் புகைதான் இப்போதைய கவர்னர் ஜெனரல் பதவி!" என்று ராஜாஜியே சொல்லியிருக்கிருர். ஆயினும் புகை சில சமயம் ராட்சஸ வடிவம் அடைவதுண்டு. பதவி கர்வம், அதிகார ஆசை என்னும் இரண்டும் இராவண கும்பகர்ணர்களாக உருவெடுப்ப

துண்டு. சுகபோக மோகம் என்னும் மோகினியாகவும் அதுஉருவெடுத்து விடும்.

இதை முன்னிட்டுத்தான் நம் அரும் பெரும் வடநாட்டுத் தலைவர்கள் தீர்க்காலோசனை செய்து, அரியாசனத்தில் ஜனக மகாராஜர் வீற்றிருந்தது போல் கவர்னர் ஜெனரல் பதவியை வகிக்கக் கூடிய வைராக்கிய சீலரை அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவர்கள் செய்துள்ள முடிவை நாம் போற்றிப் பாராட்டுகிறோம்.

★ ★ ★ ★ ★

ஆதிகாலத்திலிருந்து இந்திய சாம்ராஜ்யங்கள் பல அஸ்தினாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு செழித்தோங்கியிருக்கின்றன. இந்திய நாட்டுக்குத் தன் பெயரை அளித்த வீராதிவீரன் பரத சக்கரவர்த்தி அஸ்தினாபுரத்தில் ஆட்சி புரிந்தான் பரதனுடைய வம்சத்தில் வந்த சக்கரவர்த்தியான தர்மபுத்திரர் அஸ்தினாபுரத்துச் சிம்மாசனத்திலேதான் அரசு வீற்றிருந்தார்.

பிற்பாடு, சரித்திர பூர்வமான காலத்தில் அஸ்தினாபுரம் இருந்த இடத்தில் டில்லி மாநகர் எழுந்தது. மொகலாய சக்கரவர்த்திகளில் தர்மநெறி நின்று ஆட்சி புரிந்தவரான அக்பர் சக்கரவர்த்தி டில்லி மாநகரின் சிம்மாசனத்திலேதான் வீற்றிருந்தார்.

பரத மகாராஜாவுக்கும் தர்மபுத்திர மகாராஜாவுக்கும் அக்பர் சக்கரவர்த்திக்கும் அடுத்தபடியாக அதே வரிசையில் சேர்க்கக் கூடியவரான ஸ்ரீசக்கரவர்த்திராஜகோபாலாச்சாரியார் இப்போது டில்லி அரியாசனத்தில் ஏறி வீற்றிருக்கப்போகிறார்.

★ ★ ★ ★ ★

ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்ததும் நாட்டில் பஞ்சம் தீரும் என்றும், வறுமை ஒழியும் என்றும், வளம் செழிக்கும் என்றும், மாதம் மும்மாரி பெய்யுமென்றும், நாட்டில் பாலும் தேனும் கலந்து ஆறாக ஓடுமென்றும் நாம் சொல்ல முடியாது.

பசுவும் புலியும் ஒரு துறையில் தண்ணீர் குடிக்கும் என்றும், சமூகத்துவேஷம் அந்த க்ஷணமே ஒழிந்து நாட்டில் சகோதரபாவம் நிலவும் என்றும் நாம் சொல்வதற்கில்லை.

இம்மாதிரி சொல்லப்படும் ஜோசியங்களையெல்லாம் நம்பவும் தயாராயில்லை.

ராஜாஜி கவர்னர் ஜெனரலாக வந்த பிறகும் இயற்கையின் கோபத்தினால் தேசத்திற்கு விளையக்கூடிய கேடுகளும் மனிதர்களின் மடமையினால் நாட்டுக்கு விளையக் கூடிய தீமைகளும் நேர்ந்து கொண்டு தானிருக்கும்.

கடவுளின் நியதி என்பதாக ஒன்று இருக்கிறதல்லவா? அதன்படி உலகத்தில் எது எது எப்படி நடக்க வேண்டுமோ, அப்படி நடந்துகொண்டு தானிருக்கும் இயற்கையின் விபரீத கோபங்களுக்கும் தெய்வத்தின் அறிய முடியாத சித்தத்துக்கும் முன்னால் யார்தான் என்ன செய்ய முடியும்?

ஆனால் ஒன்று நிச்சயமாய்ச் சொல்லத் தயாராயிருக்கிறோம்.

புதுடில்லியின் அரியாசனத்தில் ராஜாஜி வீற்றிருக்கும் போது இந்தியா தேசத்தை அன்பும் அறிவும் ஆட்சி புரியும்; கருணையும் தயையும் பொறுமையும் திடசித்தமும் அதிகாரம் செலுத்தும்; அணுவளவும் நெறிதவறாத நடுக்கண்ட நியாயம் சகலருக்கும் கிடைக்கும்.

★ ★ ★ ★ ★

தமிழ்த்தாயின் அருமைப் புதல்வர் சுதந்திர இந்தியாவின் தலைமை அதிகார

பீடத்தில் – புது டில் லி அரியாசனத்தில் – வீற்றிருக்க நேர்ந்தது பற்றித் தமிழ் மக்கள் அனைவரும் அளவிலாக் குதூகலமும் பெருமையும் அடைய இடம் உண்டு. தமிழ்நாட்டு இளங்குழந்தைகள் தலை நிமிர்ந்து மார்தட்டிக் கொண்டு பேசுவதற்கு உரிமை உண்டு.

"தமிழன் என்று சொல்லடா!
தலைநிமிர்ந்து நில்லடா!"

என்ற கவிவாக்கைக் கடைப்பிடிக்க இதைக் காட்டிலும் நல்ல சந்தர்ப்பம் இனி எப்போது வரப்போகிறது?

## ஆறவுன்ஸ் காங்கிரஸ்

இந்த லீலை இதோடு முடியவில்லை. 1952ல்- சிறுபான்மையாக இருந்த காங்கிரசைப் பெரும்பான்மையாக்கி 'ஆறவுன்ஸ் காங்கிரஸ்' என்ற பழிக்கு உள்ளாகியிருந்த காங்கிரஸ்காரர்களுக்கு–ரேஷனையும் உணவுக் கட்டுப்பாட்டையும் நீக்கி கௌரவம் ஏற்படுத்தி, ஆந்திர மாகாணத்தைப்பிரித்து, சென்னையோடு சேர்ந்த தமிழக மாநிலத்தை ஏற்படுத்தியவுடன் காங்கிரஸ்காரர்களுக்கு மீண்டும் பதவியாசை பிடித்தது. ராஜாஜி கொண்டு வந்த இரண்டரை மணிநேரக் கல்வித் திட்டத்தைக் குலக்கல்வி யென்றும் சாதி முறை நிலைநாட்ட ராஜாஜி எடுக்கும் திட்டம் என்றும் தமிழக எதிர்க்கட்சிகள் கிளர்ச்சி செய்தபோது, காங்கிரஸ்காரர்களே அவர்களுடன் சேர்ந்து கிளர்ச்சி செய்தபோது ராஜாஜி பதவியைவிட்டுவிலகினர். இதை என்ன வென்பது! சிலர் 'கல்வித்திட்டத்தை கைவிடுங்களேன்; எதிர்ப்பு மறைந்து விடும் என்றனர். பதவிக்காக கொள்கையை என்றும் விடாத ராஜாஜி இன்ரு விடப்போகிருர்!

1954-ல் தமிழக முதன் மந்திரிபதவியைவிட்டு வெளியே வந்த ராஜாஜி, நாட்டு நடப்புக்களைக் கவனித்து வந்தார். காங்கிரஸ்காரர்கள், தங்களை கேட்பார் யாருமில்லை என்ற நிலைமையில் எதேச்சாதிகாரமாகவும், ஒழுக்கம் கெட்டுப் போய்வருவதைக் கண்டார். காங்கிரஸ் தலைவர்களின் பலவீனத்தை உணர்ந்து சுயநல கும்பல்கள் கறுப்பு மார்க்கெட்காரர்கள் காங்கிரஸுக்குள் ஆதிக்கம் செலுத்தத்தொடங்கியதைக் கண்டார். எனவே 1957 தேர்தலில் வாக்காளர்களுக்கு "நல்லவர்களுக்கு ஒட்டுப் போடுங்கள்" என்று அறைகூவல் விடுத்தார்.

# ராஜாஜி:
# சில நினைவுத் துளிகள்

பி. ஸ்ரீ. ஆசார்யா, விட்டலாபுரம்

1919-ம் ஆண்டில் காந்தியடிகள் சென்னைக்கு விஜயம் செய்து சத்தியாக்கிரக இயக்கத்தை தொடங்கினர் என்பது உலகறிந்த செய்தி. சென்னை நகரில் மகாத்மா இராஜகோபாலாச்சாரியாரின் விருந்தாளியாகத்தங்கினர். இராஜகோபாலாச்சாரியாரை சுருக்கமாக ராஜாஜி எனக் குறிப்பிடுவதுண்டு. அது ஒரு செல்லப்பெயராய் நிலைத்துவிட்டது.

சென்னையில் ஏற்கனவே பல ஆண்டுகளுக்கு முன் ஜி. சுப்பிரமணிய ஐயர் சுதேசமித்திரன் பத்திரிகையையும் இந்துவையும் தொடங்கியிருந்தார்.

பிறகு கஸ்தூரி ரங்கய்யங்கார் ஹிந்துப் பத்திரிகையை விலைக்கு வாங்கினர். இப்பத்திரிகை திலகர் போன்ற தீவிர அரசியல்வாதிகளை பெரிதும் ஆதரித்தது. இப்பத்திரிகை ஆசிரியரின் முயற்சியால்தான், சேலத்தில் பிரபல வழக்கறிஞராயிருந்த ராஜாஜி தம் ஏராளமான வருவாயை தியாகம் செய்து அரசியலில் தீவிரமாய் ஈடுபட்டார்.

இதில் விநோதம் என்னவென்ருல் மிதவாதிகளுக்கும் அமிதவாதிகளுக்கும் இடையே ஏற்பட்ட போட்டிப் பூசல்கள். உதாரணமாக ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் மிதவாதியாக இருந்தார். ரௌலத்துச் சட்ட்ம் என்பது அன்னிய அரசையும் ஆதிக்கத்தையும் உறுதிப்படுத்த உதவிப் பொது ஜனங்களை அரசியல் கிளர்ச்சிகளில் ஈடுபடாதபடி பயமுறுத்த பயன்பட்டது. மற்றப்படி அந்த சட்டத்தை அமுலாக்க அரசினர் விரும்பவில்லை. அமுலாக்கினல் கிளர்ச்சி வலுக்கக்கூடும் என்று அந்நிய அரசு கருதியது.

இத்தகைய ரௌலத்துச் சட்டத்தை பயன்படுவதற்கு ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் முன் வந்து அன்னிய அரசுக்குப் பேருதவி புரிந்தார். இவரை ஹிந்துப் பத்திரிகை ரௌலத்து சாஸ்திரியார் எனக் குறிப்பிட்டு தலையங்கம் எழுதியது. இதனல் பொது மக்கள் ரௌலத்து சாஸ்திரியாரை நகையாடிப் பரிகசிப்பதற்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது.

அந்தநாளில் அரசியல் கிளர்ச்சி என்பது பிராமணர்களின் பொழுதுபோக்கு என்று மற்றவர்கள் கருதினர்கள்.

ஆனல் காந்தியடிகள் சென்னை வந்து சத்தியாக்கிரகத்தை ரௌலத் சட்டத்தின் எதிர்ப்பாக தொடங்கியதால் பிராமணர்கள் அல்லாதாரும் பிரபல அறிவாளிகளும் இந்தப் புதுமைப் போராட்டத்தை மனமுவந்து வரவேற்க முன் வந்தார்கள். இதற்கு விரோதமாக இருந்தவர்களைப் பொதுமக்கள் தேசத் துரோகிகள் எனக் குறிப்பிட்டார்கள்......

இந்த நிலையில் ஜஸ்டிஸ் கட்சி பனகல் ராஜா முதலான செல்வர்களின் உதவியால் தோன்றி வளரத் தொடங்கியது. சத்தியமூர்த்தி என்ற பெரும் பேச்சாளர் தம் வாக்கு வன்மையை முழுக்க முழுக்கப் பயன்படுத்தி ஜஸ்டிஸ் கட்சியை முறியடித்தார். தேசியப் போராட்டத்தை ஆதரித்தார். இதற்கெல்லாம் உயர்நிலையாக இருந்தவர் ராஜாஜி. இவரே காந்தியடிகளின் அரும்பெரும் துணைவரானர்.

காந்திக்கும் ராஜாஜிக்கும் ஒரு முக்கியமான வித்தியாசம் என்னவென்ருல் காந்தி

யடிகள் தம் உள்ளொளியால் கண்டு கூறியதை ராஜாஜி தம் முதிர்ந்த பகுத்தறிவினல் வியாக்கியானம் செய்து விளக்கம் தந்தார். இந்த விளக்கங்கள் காந்தியடிகளின் சிறப்பான நன்மதிப்புப் பெற்றன.

இனி இப்பெரியாரின் பலதரப்பட்டபேரறிவுக்கு உதாரணமாக நான் ஒரு நிகழ்ச்சியை குறிப்பிட விரும்புகிறேன்,

1936ல் கல்கியும் ராஜாஜியுடன் சிதம்பரநாத முதலியாரின் அழைப்பிற்கு இணங்க நெல்லைக்கு வந்திருந்தார். அச்சமயம் கல்கி என் கிராமத்துக்கு வந்திருந்தார். அவருடன் ராஜாஜியும் முதலியாரும் வந்தனர். நாங்கள் எல்லோரும் என் கிராமத்துக்கு பக்கத்திலுள்ள கிருஷ்ணபுரம் சென்று அங்குள்ள அருமையான சிற்பங்களை பார்வையிட நேர்ந்தது.

அப்போது நான் அவைபற்றி செவி வழிச்செய்திகள் சிலவற்றைத் தெரிவித்தேன். அவற்றை ஆதாரமாகக் கொண்டு ராஜாஜி சில நுட்பமான கருத்துக்களை வெளியிட்டார் உதாரணமாக வீரபத்திரர் சிலையில் சிற்பி அந்த உக்கிர சொருபத்தை எப்படி கல்லில் வடித்துப் புலப்படுத்தியுள்ளான் என்பது குறித்து ராஜாஜி ஒரு சிற்ப விமர்சகர்போல் சில அரும்பெருங் கருத்துக்களை வெளியிட்டார். அச் சிற்பங்களை பன் முறையும் பார்த்து அனுபவித்திருந்த எனக்கு ராஜாஜியின் சில கருத்துக்கள் மிகவும் பொருத்தமாக தோன்றின.

வேறு சிற்பங்களையும் நாங்கள் பார்த்துப் பரவசமானேம். "ரதியும் மன்மதனும்" என்று வேறென்றில் பெருஞ்சிரிப்பில் தன்னை முழுக்க இழைந்திருந்த ஒரு பேர்வழியைப் பார்த்தோம். அவன் சாதாரணப் பேர்வழி தான்.

பிறகு நாங்கள் சிற்பி தன் மனேபாவத்தை ஆதாரமாகக்கொண்டு ஒ ரு காட்சியை சித்தரித்திருந்தான். அதில், ஒரு வேடன் அரசிளங்குமரி ஒருத்தியைக் கவர்ந்து தோள் மீது தூக்கி வைத்துக்கொண்டு, அவள் கூச்சலிடாது இருப்பதற்காக தன் கூரியவாளின் அடிப்புறத்தால் அணைத்துக்கொண்டு ஓடும் நிலையில் காணப்படுகிறன். அவள் முக பாவம் ஒரே பயம் ஆட்கொண்ட நிலையில் தோற்றமளிக்கின்றன. ஏன் என்றல், அரசிளங்குமரி திடீரென்று சிங்காரப் பூங்காவில் காணுததால் குதிரை வீரர்கள் தொடர்ந்து வருகிறர்கள்; நெருங்கி அவனை குத்தவும் முயல்கிறர்கள். அதனுல் ரத்தக்கசிவு ஏற்படுகிறது.

இந்த நிலை பேதத்தையும் சிற்பி காண நேர்ந்தது, ஒரு கருங்கற் பாறையிலே, இத்தகைய காட்சி முழுவதும் ஒரே கல்லில் அமைந்துள்ளது. இதைப் பார்த்த கல்கி முதலானேர் வியப்பில் ஆழ்ந்திருக்கையில் ராஜாஜி சிற்பத்திறனுய்வு செய்துகொண்டே போனர் அந்த திறனுய்வும் சிற்பக் காட்சி போல் அவ்வளவு ரசமாகத் தோன்றியது. இப்படி எல்லாம் சிற்பங்களை அனுபவித்த நாங்கள் சுவாமியைக் கும்பிடவும் மறந்து விட்டோம்.

> "கோதகன்ற தொழில் உடைத்தாகிக்
> கொலவு சித்திரம் கோபுரம் கோவில்
> ஈதனைத்தின் எழிலிடை உற்றுள்
> இன்பமும் வடிவாகிலப் பெற்றுள்"

என்பது பாரதியின் எழுத்தோவியமல்லவா? ஆகவே நாங்கள் சுவாமி தரிசனம் செய்யாமல் திரும்பியது வியப்பில்லை.

ராஜாஜிக்கு பல துறைகளிலும் இருந்த பரந்த அறிவை கிருஷ்ணபுரத்து சிற்ப அனுபவங்களிலும் காண நேர்ந்தது.

இந்த விதமாகப் பல விஷயங்களை அடுக்கிக்கொண்டே போகலாம் இத்தகையநிகழ்ச்சிகளிலிருந்து தான் ராஜாஜியின் அகன்ற நுட்பமான அறிவைக் கண்டு வியந்துள்ளேன்.

இத்தகைய சம்பவங்கள் என் நினைவுச் சித்திரசாலையில் ராஜாஜியைப் பற்றிப் பதிவாகி உள்ளன. அவை நினைவுக்கு வருவதைக் காட்டிலும் அவற்றை எப்படி மறக்க முடியும் என்ற எண்ணமே மேலிடுகிறது !

ஆம்: ராஜாஜியின் அறிவும் அனுபவங்களும் ஒரு பெருங்கடல். ஏன், அவரை ஒரு சாதாரண மனிதராக கருதுவதற்கில்லை. அவர் (Super Man) என்று சொல்லத்தக்க மகா மனிதர் !



# "சுதந்திரம் 40%"

இந்திய சுதந்திரம் விஷயமாக, பிரிட்டிஷ் சர்க்காரின் இந்தியா மந்திரி திரு. பெதிக் லாரன்ஸ் தலைமையில் தூதுக்குழு 1946-ல் இந்தியாவந்து, டில்லியில் இந்திய தலைவர்களுடன் பேச்சு நடத்திக் கொண்டிருந்த சமயம்.

ராஜாஜி அவர்கள் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்டு விட்டு ஓய்வெடுப்பதற்காக குற்றாலம் வந்திருந்தார்கள். டில்லியில் தொடர்ந்து பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தன.

ராஜாஜி அவர்கள் குற்றாலத்திற்கு ஓய்வெடுப்பதற்காக வருகிறார்கள் என்றால் முக்கிய நிகழ்ச்சியின் முன்னறிவிப்பு எனஅவரிடம் தொடர்பு உடையவர்கள் அப்பொழுது கருதுவதுண்டு.

டில்லி பேச்சுவார்த்தைகள் பற்றி தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் எங்களுக்கு இருந்தது. ராஜாஜி அவர்களுக்கு "தாங்கள் டில்லி புறப்பட்டுச் செல்லும் போது சங்கரன் கோவில் ரயில் நிலையத்தில் தங்களைச் சந்திக்க விரும்புகிறோம் தாங்கள் புறப்பட்டுச் செல்லும் தேதியை தெரிவிக்க வேண்டுமென குற்றாலத்திற்கு கடிதம் எழுதி யிருந்தேன். இரண்டு தினங்கள் கழித்து ராஜாஜி அவர்களை டில்லி வருமாறு காந்திஜி தந்தி கொடுத்திருப்பதாக பத்திரிகையில் பார்த்து எனது சக ஊழியர் திரு எஸ்.சுவாமிநாதனும் நானும் ரயில் நிலையத்திற்கு சென்றோம். நாங்கள் எதிர்பார்த்தபடி அதே ரயிலில் ராஜாஜி அவர்கள் இருந்தார்கள். ரயில் சங்கரன்கோவில் ரயில் நிலையத்தில் மூன்று நிமிடங்கள் தான் நிற்கும். அதற்குள் அவர்களிடம் எங்கள் விருப்பத்தை கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பெட்டியில் ஏறி ராஜாஜி அவர்களுக்கு மாலைஅணிவித்துக்கொண்டே கடிதத்தை நினைவுபடுத்தினேன். ராஜாஜி அவர்கள் 'டில்லி புறப்படுவது நிச்சயமில்லாமலிருந்தது பதில் எழுதவில்லை என்ன சமாசாரம்' எனக்கேட்டார்கள்.

டில்லிபேச்சு வார்த்தைளின் பலனைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுவதாகக் கூறினோம். ராஜாஜி அவர்கள் 40% (40சதம்) என ஆங்கிலத்தில் கூறினார்கள். 40% என்றால் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என நான் கூறியதும் 40மார்க் வாங்கினால் பையன் பாஸ் செய்துவிடுவானல்லவா எனக் கூறிவிட்டு சிரித்தார்கள். ரயிலும் புறப்பட்டது நாங்களும் மகிழ்ச்சியுடன் விடைபெற்றுக் கொண்டோம்.

ஆரம்பத்திலேயே முடிவையும் நிச்சயிக்கும் ஆற்றலும் தீர்க்கதரிசனமும் ராஜாஜி அவர்களிடம் தானே காண முடியும்.

—தியாகி சிதம்பரம்,
சங்கரன்கோவில்.

# ராஜாஜி எனும் பெயரோன்

**தீபம். நா. பார்த்தசாரதி**

1. அஞ்சாமை துணிவூக்கம் கல்வியொடு
   ஆன்மீக நற்பண்பும்
   எஞ்சாமற் கொண்டபெருந் தவமுனிவன்
   எளிமையுடன் புலமைமிக்கோன்
   நஞ்சாகத் தீமைகளை வெறுத்தெதிர்ப்போன்
   நல்லோர்க்குத் துணையாவான்
   துஞ்சாத புகழ்மிக்கோன் தூய்மையாளன்
   திருராஜாஜி எனும்பெயரோன்

2. நூலாசிரியன் நுண்ணறிவாளன் அரசியலின்
   நுணுக்கங்கள் மிகவறிந்தோன்
   தோலாத நாவன்மைத் தரமுடையோன்
   துயர்க்கஞ்சா நெஞ்சுரத்தின்
   வாலறிவன் கலைவன்மைத் தெளிவுடனே
   வகைவகையாம் துறைகளிலே
   நூலறிவன் சிந்தனையின் திறமறிவோன்
   நல்லான் சக்கரவர்த்தி

3. பெருமரபில் தோன்றிவந்த பேரறிஞன்
   புவிவணங்கும் காந்திக்கு
   ஒருவகையில் மனச்சாட்சிக் காவலனும்
   உடன்பழகு நண்பனுமாம்
   கருவுருவில் திருவுடைய கருத்தழகன்
   கலங்காத போர்க்குணத்தின்
   திருவுருவம் தெரிந்துசெயல் வகையறிந்தோன்
   திருராஜாஜி எனும்பெயரோன்.

★ ★ ★

# ராஜாஜியைப் பற்றிக் கல்கி

தொகுத்தவர் சுந்தா

தம்மீது அன்பு கொண்ட அருமை அண்ணுவாகவும், தமது அரசியல் குருவாக வும், போற்றும் வீரத் தலைவராகவும், நிகரிலா மாமேதையாகவும், தனித்தன்மைகொண்ட இலக்கியச் செல்வராயும், உத்தம குண சீல ராயும், ராஜாஜியைக் கல்கி கருதி, அன்ஞ ரைப் பற்றிச் சமயம் வாய்த்தபோதெல்லாம் எழுதிக்கொண்டே இருந்தார். அவ்வாறு கல்கி எழுதிய புகழ் மொழிகளின் சில பகுதி கள் இங்கே தொகுத்துத் தரப்படுகின்றன.

முதலாவதாக, முதல் சந்திப்பு 1918-ல் கல்கி மாணுக்கனுக இருந்தபோது:-

திருச்சிராப்பள்ளி டவுண் ஹாலுக்கு எதிரில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் கூடிற்று வங்காளத்தின் பிரசித்திபெற்ற தேசபக் தரும், இணையற்ற வாக்கு வன்மையுள்ள பிர சங்கியுமான ஸ்ரீவிபின் சந்திரபாலர் அன்று பிரசங்கம் செய்யவிருந்தார். அவரைப் பார்க் கவும் அவருடைய பேச்சைக் கேட்கவும் வந்து கூடியிருந்தவர்களில் ஒரு ஹைஸ்கூல் மாணுக்கனும் இருந்தான். மேடையில் விபின் சந்திர பாலருக்குப் பக்கத்தில் மற் ஞெரு நாற்காலியில் உட்கார்ந்திருந்த தமிழர் யார் என்று அறிந்துகொள்ள அவனுக்கு ஆவல் உண்டாயிற்று. கூட்டத்தில் அருகில் உட்கார்ந்திருந்தவரிடம் "அவர் யார் தெரி யுமா?" என்று கேட்டான் — (கல்கியாகிய அந்த மாணுக்கன்)

"அவர்தான் சேலம் சி. இராஜகோபா லாச்சாரியார்" என்று அவர் கூறினுர்.

"சேலத்தில் அவருக்கு என்னவேலை?"

"பெரிய வக்கீல், முனிசிபல் சேர்மன்"

"தேசிய இயக்கத்தில் இவருக்கு என்ன சம்பந்தம்?

"தேசத்துக்கு உழைப்பவர்களுக்குப் பணம் கொடுத்து உதவி செய்பவர்".

"இன்னும் ஏதாவது உண்டா?"

"பெரிய ஆசார சீர்திருத்தக்காரர், தீண்டா வகுப்பினருடன் சமபந்தி போஜனம் செய்தார். அதற்காக அவரைச் சேலத்தில் சாதியை விட்டுத் தள்ளி வைத்திருக்கிறுர் கள்".

அவ்விளைஞனுக்கு முதன் முதலில், ஸ்வாமி விவேகானந்தரின் பிரசங்கங்களைப் படித்ததன் பயனுகச் சாதி வேற்றுமையிலும் தீண்டாமையிலும் வெறுப்பு உண்டாகியிருந் தது. வைதிகர்கள் என்று சொல்லப்படு வோரின் போலி ஆசாரங்கள், பாஷாண்டித் தனங்கள், சுயநலச் செய்கைகள் முதலிய வைகளைப் பாக்கப் பார்க்க அவ்வெறுப்பு அதிகமாயிற்று. பாரதியாரின் கீதங்களும் ஓரளவு இவ்வெறுப்பை வளர்த்து வந்தன. ஆனுல் காரியாம்சத்தில் சாதி வேற்றுமை களையும் தீண்டாமைகளையும் ஒழித்திருந்த தமிழர் ஒருவரை அதுவரையில் அவ்விளை ஞன் பார்த்ததில்லை. எனவே அவனுடைய கண்களுக்கு ஆச்சாரியார் பெரிய வீர புருஷ ராக அப்போது தோற்றம் அளித்ததில் வியப்பில்லை அல்லவா?

*(ஆனந்த விகடன் 1—10—32)*

(மேலும் அடுத்தடுத்து சில சந்திப்புக் கள். பின்னர் திருச்செங்கோட்டில் ராஜாஜி அமைத்த காந்தி ஆசிரமத்தில் அவரை முதல் முதலாக 1925ல் கண்டது பற்றி).

அங்கே ஒரு தென்னந்தோப்பில் பனை ஓலை வேய்ந்த ஒரு குடிசையில், தரையில் விரித்திருந்த பாயின்மேல் உட்கார்ந்து ஆச்சாரியார் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். இந்தக்காட்சி ஆசிரமத்தைப் பார்க்கப்போன இளைஞனுக்கு (கல்கிக்கு) அளவில்லாத ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. தீண்டாத வகுப்புச் சிறுவர்களும் கலந்திருந்த பள்ளிக் கூடத்தில் ஆச்சாரியார் சந்தோஷமாக அரிச்சுவடிப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தபோது, அவனுடைய ஆச்சரியம் இன்னும் அதிகமாயிற்று. சாப்பாடு நேரத்தில் ஆசிரமத் தொண்டர்களும்ஆச்சாரியாரும், அவருடைய புதல்வி லட்சுமியும் மற்றொரு பெண்மணியும் சமபந்தியாக உட்கார்ந்து, கவுண்டர் பையன் ஒருவன் சமைத்த எளிய உணவைச் சாப்பிட்டபோது, அவ்விளைஞன் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்து போனான். அங்கு உட்கார்ந்து உணவருந்திய தொண்டர்களில் ஆதித் திராவிட இளைஞர் இருவரும் இருந்தார்கள். (மேற்படி)

(அப்போது ஆசிரமத்தைச் சும்மா பார்த்துவிட்டுப்போன கல்கி, சுமார் ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு அதிலேயேவசித்துத் தொண்டாற்றச் சென்றார். அப்போது ஏற்பட்ட நெருக்கமான நேர்முகத் தொடர்பு, ராஜாஜியைக் கல்கி எம்மட்டில் மதிக்க வைத்தது என்பதை இந்த வாக்கியங்கள் புலப்படுத்தும்.)

காந்திமகானிடம் இருந்த பக்தி அப்போது ராஜாஜியிடமும் இருந்தது. ஒரு படி அதிகமாகவே இருந்தது. ராஜாஜியின் தோற்றம், பேச்சு, அவருடைய ஒழுக்கத்தையும் தியாக வாழ்க்கையையும் பற்றி நான் தெரிந்து கொண்டிருந்த விவரங்கள் எல்லாம் அத்தகைய பக்தியை எனக்கு உண்டாக்கி இருந்தன.

காந்தி மகாத்மா எவ்வளவோ பெரிய மகாத்மாதான். ஆனாலும் அவர் தமிழ் அறியாத குஜராத்திக்காரர்தானே? எனவே, அவருடைய போதனை உள்ளத்தில் ஒட்டுவது கொஞ்சம் கஷ்டமாய் இருந்தது. ஆனால், ராஜாஜியோ, நமது சொந்தத் தமிழ் நாட்டவர், நமது தாய்மொழியில் நமது உள்ளத்தில் ஒட்டும்படி பேசக் கூடியவர்.

(வெள்ளி மணி 5—8—47)

(வேதாரண்யத்தில் ராஜாஜி உப்பு சத்தியாக்கிரகம் செய்து சிறை சென்றதைப் பற்றி, அவருக்கு உதவியாளராய் இருந்து நடத்திய "விமோசனம்" என்ற மதுவிலக்குப் பிரசாரப் பத்திரிகையின் கடைசி இதழில் கல்கி எழுதியது—)

ஸ்ரீ ஆச்சாரியார் சிறை சென்றதைக் குறித்து யாரும் வருந்தவேண்டியதில்லை. இந்நாளில் உண்மையான தேசபக்தர்கள் இருக்கவேண்டிய இடம் சிறைக்கூடமேயாகும். நமது ஆசிரியருக்கு இந்தப் பேறு கிடைத்ததற்காக நாம் மகிழ்ச்சி அடைய வேண்டும். மேலும் சுமார் பத்து வருஷ காலமாய் இடைவிடாமல் பல துறைகளில் தாய்நாட்டுக்காக உழைத்து வந்த நமது தலைவருக்கு சர்க்கார் தயவினால் சிறிது காலம் ஓய்வு கிடைத்திருப்பதற்காகவும் நாம் மகிழ்ச்சி அடையலாம். ஆனால் அவருடைய உழைப்புக்கும் தியாகத்துக்கும் நாம் நம்மைப் பாத்திரர்களாகச் செய்துகொள்ள வேண்டும்.

(அவ்வாறே பலரைப் பாத்திரர்களாகக் கல்கி செய்து விட்டுத் தாமும் ஒரு பாத்திரராகி, இரண்டாம் தடவையாகச் சிறை புகுந்தார் — முதல்முறை சென்றது, ஒத்துழையாமை இயக்கத்தின் போது, பள்ளிப் படிப்பை விடுத்து "ராஜத்துவேஷ" சொற்பொழிவுகள் நிகழ்த்தியதற்காக.

வரலாற்றுச் சக்கரத்தின் சுழற்சியினாலும் காங்கிரஸ் கொள்கையில் ஏற்பட்ட மாற்றத்தின் காரணத்தாலும், 1937 மத்தி வாக்கில், சென்னை மாகாணத்தின் ஆட்சிப் பீடத்தை அங்கீகரிக்கும் வாய்ப்பினை ராஜாஜி அடைந்தார். சென்னை தியாகராஜ நகரில், பஸ்லுல்லா தெருவில், தாம் கட்டிக்குடியிருந்த வீட்டை அப்போது ராஜாஜியின் வசிப்புக்

காகக் கொடுத்தார் கல்கி. அந்த இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் கல்கியின் பெருமித வரிகள்:)

முதன் முதலில் காங்கிரஸ் ஆட்சி ஏற் படும்போது, சக்கரவர்த்தி ராஜகோபாலாச் சாரியாரை அரசாங்கத் தலைவராய்ப் பெறும் மகாபாக்கியத்தை நாம் அடைந்திருக்கிறோம். இந்த விஷயத்தில் மற்றக் காங்கிரஸ் மாகா ணங்களைக் காட்டிலும் சென்னை மாகாணம் அதிர்ஷ்டம் செய்தது என்பதில் சந்தேக மில்லை. கௌதம புத்தரின் தியாகமும், சங்கராச்சாரியாரின் மதிநுட்பமும், இராமா நுஜரின் தயாளமும், பட்டினத்தடிகளின் வைராக்கியமும் சேர்ந்து உருவெடுத்தது போன்று, இன்றைய தினம் தென்னாட்டுக்கே பெருமை அளித்துக் கொண்டிருப்பவர் நமது ராஜாஜி.

*(ஆனந்த விகடன் 18—7--37)*

(மீண்டும் வரலாற்றுச் சுழற்சி. இரண் டாவது உலக மகா யுத்தத்தில் ஈடுபட்ட பிரிட்டன் அதிலே இந்தியாவையும் ஈடு படுத்திற்று – அதன் தலைவர்களின் உடன் பாட்டைப் பெறாமலும், பெறவேண்டும் என்று எண்ணாமலும், அந்த எதேச்சாதிகாரப் போக்கை இந்திய தேசிய காங்கிரஸ் கண் டித்து, அப்போது ஏழு மாகாணங்களில் ஆட்சி நடத்திய காங்கிரஸ் மந்திரி சபைகளை ராஜிநாமா செய்து விடும்படி சொல்லிற்று ஏழிலும் முன்னதாக சென்னையில் ராஜாஜி மந்திரி சபை, 1939 அக்டோபர் இறுதியில் பதவியிலிருந்து விலகிற்று).

ராஜினாமா போனவுடனே, பஸ்லுல்லாத் தெரு, 48-ஆம் நம்பர் வீடு ஒரு பெரிய நெடு மூச்சுவிட்டிருக்க வேண்டும். ''அப்பாடி! இனிமேல் கூட்டம் இல்லை, கும்பல் இல்லை, பேச்சில்லை, விவாதம் இல்லை, இராத்திரி கண் விழிப்பும் இல்லை'' என்று அந்த வீடு சந்தோஷப்பட்டிருக்கலாம். ஆனால் அது அற்ப சந்தோஷம் என்பதைச் சீக்கிரத்தி லேயே அது தெரிந்து கொண்டிருக்கும். ராஜாஜி பிரதம மந்திரிப் பதவியை விட்டாரே தவிர, தேசத் தலைமையை விடவில்லை.

(மகாத்மா காந்தி புதியதொரு சத்தியாக் கிரகத்திட்டத்தை அறிவித்தார். தேசபக்தர் கள் தனித்தனியாகவும் அமைதியான முறை யிலும், சட்டத்தை மீறிச் சிறை புகுவதற்கு அது வகை செய்தது. அந்தத் திட்டத்தின் படி சத்தியாக்கிரகிகள் தனித்தனியே காந்திஜிக்கு விண்ணப்பம் செய்து அவ ருடைய அனுமதியைப் பெற வேண்டும். அவ்வாறு அனுமதி பெற்றவர், ''யுத்த முயற் சியில் ஈடுபடாதீர்கள்'' என்று மக்கள் கூட் டங்களில் பேசலாம்; அல்லது அவ்விதக் கருத்து அடங்கிய வாக்கியங்களை எழுதிப் படிக்கலாம்; இல்லாவிடில், இன்னும் எளிதான முறையில் உரிய அதிகாரிகளுக்கு கடிதம் மூலம் அக்கருத்தைத் தெரிவிக்கலாம்... ..... அதுதான் ''தனி நபர் சத்தியாக்கிரகம்'' என வழங்கலாயிற்று. அந்தச் சத்தியாக்கிரகத் திலே, விநோபா பாவேயைத் தொடர்ந்து, பல தலைவர்கள் அடுத்தடுத்துக் கைதானர் கள்.

1940 டிஸம்பர் மூன்றும் தேதியன்று ராஜாஜி கைதாகிச் சிறை தண்டனை அடைந் தார் )

பஸ்லுல்லா சாலை.

தன் கண் முன்னால் தியாக வாழ்க்கை வாழ்ந்து, தேசத்துக்காகவும் பொது நலத்துக் காகவும் பாடுபட்டு வந்த மகானை ஒரு சமயம் அவர் கீழ் வேலை பார்த்த போலீஸ்காரர்கள் வந்து கைது செய்துகொண்டு போகும் காட் சியைக் காண்பதற்காக, கூட்டம் கண்ணீர் ததும்பிய கண்ணீருடன் காத்துக் கொண்டி ருந்தது.

திங்கட்கிழமை காலை 6–30 மணி முதலே பஸ்லுல்லா சாலையில் ஜனக் கூட்டம் சேர ஆரம்பித்து விட்டது......

மறுநாள் சரியாகப் பத்து மணிக்குப் போலீஸ் அதிகாரிகள் வந்து சேர்ந்தார்கள். பத்து அடித்து ஒரு நிமிஷத்துக்கு ராஜாஜி போலீஸ் வண்டியில் இருந்தார். கூடியிருந் தவர்களின் ''ஜய'' கோஷம் வண்டியைத் தொடர்ந்து போயிற்று.

பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் ஜனுப் அப்பாஸ் அலிகானின் கோர்ட்டில் வழக்கு விசாரணை நடந்தது......

ஒரு வருடச் சிறைவாசத் தண்டனை என்ற தமது தீர்ப்பை மாஜிஸ்ட்ரேட் கூறினுர். அவர் உணர்ச்சி மிகுதியினுல் தவித்த தவிப்பு எல்லாருக்கும் நன்ருகத் தெரிந்தது.

என் அவயவங்கள் சோர்கின்றன. என் வாய் உளர்கிறது. என் உடம்பு நடுங்குகிறது. மயிர் சிலிர்க்கிறது. காண்டீபம் கையிலிருந்து நழுவுகிறது. உடம்பில் எரிச்சல் உண்டாகிறது. என்னுல் நிற்க முடியவில்லே. என் மனம் சுழலுகிறது''

இந்தப் பகவத் கீதை சுலோகத்தை அவர் சொல்லி, ''அந்த அர்ச்சுனனுடைய நிலேமையிலேயே நானும் இருக்கிறேன்'' என்று ஜனுப் அப்பாஸ் அலிகான் கூறினர்...

அடுத்த காட்சி ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் பன்னிரண்டு மணி முதலே ஸ்டேஷன் வெளி மண்டபத்திலும், உள்ளே பிளாட்பாரத்திலும் ஜனங்கள் கூட ஆரம்பித்து விட்டார்கள்.

ரயில் கிளம்புவதற்கு ஐந்து நிமிஷத்துக்கு முன்னுல்தான் ராஜாஜியைக்கொண்டு வந்து ரயிலில் ஏற்றினுர்கள். அந்த ஐந்து நிமிஷமும் ஒரே ஜய கோஷந்தான்..

இதிலெல்லாம் வியக்கத் தக்கது எதுவும் இல்லே. இயற்கையானதுதான்; எதிர்பார்த்ததுதான் ஆனுல் ரயில் கிளம்பியபோது கூட்டத்தில் அத்தனே பேர் கண்ணீர் விடுவார்கள், அழுவார்கள் என்பதை மட்டும் நான் எதிர்பார்க்கவில்லே.

தேசவேலேயில் ராஜாஜி தாட்சண்யம் பார்ப்பதே கிடையாது; குற்றம் கண்டுபிடிப்பதற்கும் தயங்குவதில்லே. எவ்வளவோ பேரிடம் எத்தனேயோ கண்டிப்பாக நடந்து கொண்டிருக்கிறுர். அதெல்லாம் யாருடைய மனத்திலும் இருந்ததாகத் தெரியவில்லே. அவர்களுடைய உள்ளத்திலிருந்துபொங்கிய அன்பும் பக்தியுந்தான் அப்படிக் கண்ணீராகப் பெருகிற்று. சென்ற சில வருஷ காலததில் அவ்வளவு தூரம் சென்னேப் பொதுஜனங்களின் மனத்தையும், தொண்டர்களின் அன்பையும் கவர்ந்திருந்தார் என்று தெரிந்தது. எனக்குத்தான் ஏதோ அவர் மேல் அபாரமான அன்பும் பக்தியும் உண்டென்று எண்ணி இருந்தேன். இந்தக் கர்வம் அன்ருேடு தீர்ந்தது.

(ஆ. வி. 8-12-40)

(ராஜாஜியை அடுத்துக் கல்கியும் ஆனந்த விகடன் மெய்யாசிரியர் பதவியைத் துறந்து சத்தியாக்கிரகம் செய்து, ராஜாஜியுடனேயே சிறைவாசம் செய்யும் பாக்கியத்தை அடைகிருர். பின்னர் வெளியே வந்து, நண்பர் சதாசிவத்தின் உதவியுடன், சொந்தப் பத்திரிகையைத் தொடங்கி, அதனே ராஜாஜியின் மெய்க்காவல் கோட்டையாக மாற்றுகிருர். தம் அருந்தலேவருக்காக அவர் புரிந்த பேனுப் போர்களே இங்கே குறிப்பிட இடமில்லே. ஆகவே, நேரே நம் தேசம் சுதந்திரப் பதவி அடைந்து, ராஜாஜி மேற்கு வங்க கவர்னராகப் பதவி வகிக்கும் காட்சியைக் கல்கியின் கண்கள் மூலம் காண்போம்)

வைஸ்ராய்களும் கவர்னர்களும் வீற்றிருந்த சிம்மாசனத்தில் அமருவதற்காக கதர் வேஷ்டியும், கதர் ஜிப்பாவும், குறுக்கில்மடித்த கதர் அங்க வஸ்திரமும் தரித்த மெலிந்த மனிதர் ஒருவர், முன்னும் பின்னும் 'எஸ் டி காம்ப் என்றும் கம்பீரத் தோற்றமுள்ள அதிகாரிகள் தொடர வந்து கொண்டிருந்தார். அந்த அதிசயக் காட்சியைசுவரில் (பட உருவில் தொங்கிய பிரிட்டிஷ் பிரபுக்களும் துரைமார்களும் கண் விழிகள் வெளியே வந்து விடுமோ என்னும் படியாக விழித்துப் பார்க்கலானுர்கள்.

மேற்கு வங்காளத்தின் பத்து மந்திரிகள் நீதிபதி மித்தர், கல்கத்தாவின் ஷெரீப், மேயர், பிரபல பத்திரிகைக் காரர்கள் உள்ளிட்ட சுமார் நூறுபேர் வந்திருந்தார்கள்.

நீதிபதி மித்தர், அச்சிட்ட விசுவாசப் பிரமாணத்தை எடுத்துப் படிக்க, ராஜாஜி பின்னேடு சொல்லிக்கொண்டு வந்தார். கடைசியில் கையெழுத்தும் போட்டார். இது நடந்து வருகையில் நூறு காமிராக்கள் 'கிளிக்' 'கிளிக்' என்று சப்தித்தன. சினிமா காமிராக்கள் சரசரவென்று ஒலித்தன.

கவர்னர் பதவி ஏற்பு வைபவம் சுமார் இரண்டு மணிக்கு முடிவுற்றதும், நேரமானுலும் பாதகமில்லை என்று தமிழ்நாட்டின் சார்பாக ராஜாஜிக்கு வாழ்த்துக் கூறுவதற்காக, கவர்னர் மாளிகையில் அவர் இருந்த பகுதியைத் தேடிப் போனேம்.

(கல்கி இதழ்)

(அடுத்தாற்போல், கவர்னர்-ஜெனரல் பதவியைத் தலைநகரில் ராஜாஜி ஏற்றதை முன்னிட்டு, 1948 ஜூன் 20ஆம் தேதிய கல்கி இதழை, ராஜாஜி மலராக அதன் ஆசிரியர் வெளியிட்டு, அதிலே, 'அரியாசனத்தில் ஜனகமகாராஜர்' என்ற மகுடத்துடன் எழுதிய சிறப்புக் கட்டுரை:)

புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் நம்மிடையே ஒரு ஜனக மகாராஜர் இருக்கிறுர். பாரத நாட்டின் தென் பகுதியில் தெய்வத் தமிழகத்தில் பிறந்த புண்ணியர் அவர். அரண்மனை வாழ்வையும் ஆசிரமக் குடிசைகளையும் ஒன்ருகக் கருதுகிறவர். சுகத்தையும் துக்கத்தையும் சமமாக எண்ணுகிறவர். போற்றுதலினுல் பூரிப்பதில்லை; வசை மொழிகளினுல் ஆயாசம் அடைவதில்லை. பதவியையும் அதிகாரத்தையும் அவர் தேடிச் செல்வதில்லை; அவை அவரைத் தேடி வரும்போது பயந்து ஒதுங்குவதும் இல்லை.

(ராஜாஜி ஜனகராய் உயர்வு பெற்றதை நேரிலே கண்டும், பின்னெரு இதழில் ஒரு கட்டுரை எழுதினுர் கல்கி. ஆனுல் அதை விடச் சுவையான கடிதம் ஒன்றை, அந்த மகத்தான நிகழ்ச்சியைக் கண்ட தினத்தன்றே ரசிகமணி டி. கே. சிக்கு எழுதினுர்:)

இன்று காலையில் குறிப்பிட்ட சுபமுகூர்த்தத்தில் ராஜாஜி முடிசூட்டு விழா நடந்தது எல்லாம் பட்டாபிஷேகம் மாதிரிதான். கிரீடம் மட்டும் இல்லை. இங்குள்ள அரசாங்க அரண்மனையின் விசாலமும் உன்னதமும். பார்த்தால் ஒழிய நம்ப முடியாது. காந்தி ஆசிரமத்துக் குடிசையிலிருந்து இந்தியாவிலேயே மிகப் பெரிய அரண்மனைக்கு வந்து சேர்ந்த தலைவர், தர்பார் மண்டபத்துச் சிம்மாசனத்துக்கு நடந்து வந்தபோது பரம்பரையாகச் சாம்ராஜ்யம் ஆண்ட சக்கரவர்த்தி நடந்து வருவது போலத்தான் இருந்தது. அதே சமயத்தில் எந்த நிமிஷத்திலும் இந்த அரண்மனைத் தூசியை உதறிவிட்டு வெளியேறத் தயாராய் உள்ள தபோ முனிவர் வருவது போலவும் இருந்தது.

(விடுதலை அடைந்த இந்தியாவின் முதலாண்டு நிறைவைக் கொண்டாடிய கல்கி மலரில், கவர்னர் ஜெனரல் ராஜாஜியின் சிறு கதை ஒன்று சிறப்பிடம் கொணடிருந்தது. அதைப்பற்றி அடுத்த இதழில் விசேஷக் குறிப்பு ஒன்றைக் கல்கி ஆசிரியர் வெளியிட்டார்.)

புது டெல்லியில் ஆசியாவிலேயே மிகப் பெரிய மாளிகையில் வசித்தாலும், ராஜாஜியின் மனம் தமிழ் நாட்டுக் கிராமத்திலுள்ள ஏழை மனிதனிடம் நிலைத்து நிற்கிறது என்பது அக்கதையிலிருந்து தெளிவாகிறது சுதந்திர இந்தியாவின் மக்களும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் குறிப்பாக அக்கதை விளக்குகிறது,

எவ்வளவு பெரிய ஒப்பிலா உன்னதம் வாய்ந்த ஸ்தானத்தை வகித்தாலும், தமிழையும் தமிழர்களையும் மறந்து விடவில்லை ராஜாஜி என்பதற்குப் "பிள்ளையார் காப்பாற்றினுர்" என்ற கதையே அத்தாட்சி.

(22—8—48)

(ராஜாஜியின் நூல்களில் பெரும்பாலானவற்றிற்குக் கல்கியே காரணமாவார். கல்கியின் வேண்டுகோள், அவர் ஊட்டிய ஊக்கம்,

அவர் ஆவலுடன் வெளியிட்ட பாங்கு-இவை காரணமாகத்தான் ராஜாஜி இலக்கியம் என்ற தனிப்பட்ட இலக்கியம் ஒன்று உருவாகி உலவி வருகிறது. ராஜாஜி யின் இலக்கியத்தைக் கல்கி எவ்வாறு மதித் தார் என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டு:)

வாழ்க்கை முறையில் எளிமையும் சிந் தனையில் உயர்வும் உடையவர்களே, உலகில் மகான்கள் என்று போற்றப்படுகிறார்கள். எளிய வாழ்வுக்கும் உயரிய சிந்தனைக்கும் ராஜாஜி உதாரண புருஷராய் விளங்குகிறார். இந்த இரண்டு அம்சங்களையும் அவருடைய தமிழ் நடையிலும் காண்கிறோம்.

எளிமை என்றால், இதைவிட எளிமை யாகத் தமிழ் எழுதவே முடியாது என்று சொல்லலாம். ஆனால், நடை எவ்வளவுக்கு எளியதோ, அவ்வளவுக்கு ராஜாஜி எழுதும் விஷயங்கள் உயர்வானவை. இன்னும் ராஜாஜியிடம் நாம் காணும் ஒப்பற்ற தூய்மை ஒழுக்கம், கட்டுப்பாடு, வினைத்திட்பம் ஆகிய வற்றையும் அவருடைய தமிழ் நடையிலே காண்கிறோம்... மலைச்சுனையில் உற்பத்தி யாகிப் பாறுங்கற்களின் மீதும் கூழாங்கற் களின் மீதும், சலசலவென்று சப்தித்துக் கொண்டு ஓடும், பளிங்கு போன்ற தூய்மை யான ஓடை நீரில், எத்தகைய தெளிவை நாம் காண்கிறோமோ, அத்தகைய தெளிவை ராஜாஜியின் தமிழ்நடையில் காண்கிறோம்.

இன்னும் நூறு வருஷத்துக்குப் பிறகு வரும் தமிழ் சந்ததிகள் படிக்கக்கூடிய நூல் கள் எவை என்று கேட்டால், பாரதியாரின் கவிதைகளும், ராஜாஜியின், கதைகள் கட்டுரைகளுந்தான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. (கல்கி இதழ் 16—7—44)

இந்தத் தொகுப்பை, "ராஜாஜியை நினைக்கும் போது கல்கியை நினைக்காமல் இருக்க முடியாது. அதே போல, கல்கியை நினைக்கும் போது ராஜாஜியை நினைக்காமல் இருக்க முடியாது" என்ற முத்தாய்ப்புடன் முடிக்கலாம்.



## உலகமே வியந்தது.





இவ்வல்லரசுப் போட்டிகளில் பிரான்ஸும் சேர்ந்து கொண்டு தான் உற்பத்தி செய்த அணுகுண் டினைச்சோதனை போடப் போவதாக அறிவித்தும் பிரிட்டிஷ் பெரியார் பெட்ராண்டு ரஸ்ஸல் போன்ற வர்கள் சோதனை நடத்தும் இடத்துக்குக் கப்பலில் சென்று சத்தியாகிரகம் செய்து நிறுத்துவது என்ற முடிவு எடுத்தபோது ராஜாஜிதாம் அந்தப் படகில் செல்ல அனுமதிக்குமாறு நேருஜிக்கு எழுதினார். மகாத்மாகாந்தியின் முதல் சீடரும் காந்திஜியின் சத்தியாக்கிரக தத்துவத்துக்கு வியாக்கியான கர்த்தாவு மான ராஜாஜி. சத்தியாக்கிரக ஆயுதத்தை உலகஅரங் குக்குக் கொண்டு சென்றார். இதைக் கேட்டு நேருஜி வியந்தார்: உலகமே வியந்தது.

# தன்னலமற்ற

# பொதுநலத் தலைவர்

நா. மகாலிங்கம்

பகீரதன் மாதவம் செய்து பூவுலகத்துக்குக் கங்கையைக் கொண்டு வந்தான். மகாத்மா காந்தியின் தலைமையில் இயங்கிய அந்த நாள் காங்கிரஸ் மகாசபை பகீரதப் பிரயத்னம் செய்து இந்தியாவுக்குச் சுதந்திரம் கொண்டு வந்தது.

காங்கிரசும் காந்தி மகானும் இந்தியாவுக்கு அளித்த சுதந்திரத்தைக் காப்பாற்றி வளர்க்கும் பொறுப்பையும் காங்கிரஸ் தலைவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

அதில் ராஜாஜி அவர்கள் இந்தியா பெற்ற சுதந்திரத்தையும், ஜனநாயகத்தையும் காப்பாற்ற அரும்பாடு பட்டிருக்கிறார். அதற்காகப் பெரும் பொறுப்புகளையும் ஏற்றுக்கொண்டார். அந்த மகத்தான பொறுப்புகளை மிகத்திறமையாகவும் நிர்வகித்தார்.

ராஜாஜி அவர்களைப் பற்றி அரசியல் மேதைகள் சொல்லி இருப்பதைக் கேளுங்கள்.

பிரிக்கப்படாத பழைய சென்னை மாகாணத்தின் முன்னாள் கவர்னர் எர்ஸ்கின் சொல்கிறார்: ''நான் சென்னை கவர்னராக இருந்தபோது இரண்டு ஆண்டுகள் ராஜாஜி பிரதம மந்திரியாக இருந்தார். (அப்போது மாநில முதன் மந்திரிகளுக்குப் பிரதம மந்திரி என்று பெயர்). அந்தக் காலத்தில் நாங்கள் அடிக்கடி சந்தித்துப் பல விஷயங்களைப் பற்றி கலந்து ஆலோசிப்போம். இந்த விவாதங்களினால் ராஜாஜி ஏதாவது பயன் அடைந்தாரா என்று எனக்குத் தெரியாது. ஆனால் நான் அளவற்ற பயன் அடைந்தேன் என்பது மட்டும் நிச்சயம்''

ஜவஹர்லால் நேரு சொல்கிறார்: ''ஒரு விஷயத்தைப் பற்றி நான் யாரிடமாவது கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று இருந்தால் ராஜாஜியுடன் தான் அதிகமாகக் கலந்து ஆலோசிக்க விரும்புவேன். அனேகமாக அவருடைய முடிவுகளை ஒப்புக்கொள்வேன். அவர் முடிவுகளை ஒப்புக்கொள்ள முடியாவிட்டாலும் அவருடன் விவாதித்ததில் நான் பெரும் நன்மையை அடைவது என்பது நிச்சயம்''.

லார்டு மவுண்ட் பேட்டன்: ''இந்தியாவின் மிகப்பெரிய ராஜதந்திரி ராஜாஜி. ஒழுக்கத்திலும், உறுதியிலும், தீரத்திலும் இணையற்றவர்'' என்று சொல்லி இருக்கிறார்.

இவ்வாறு சிறந்த ராஜதந்திரிகளால் புகழப்பட்டவர் ராஜாஜி. அவருடைய உறுதிப்பாட்டுக்கும் தீரத்துக்கும் பல சம்பவங்களை எடுத்துக் காட்டலாம்.

பாகிஸ்தான் கோரிக்கையைப் போல் இந்தியப் பொதுமக்களின் வெறுப்புக்கு ஆளான கோரிக்கை இந்தியாவில் வேறு இருந்தது கிடையாது. மகாத்மா உட்பட காங்கிரஸ் மகாசபையே அந்தக் கோரிக்கையை நிராகரித்தது. அத்தகைய கோரிக்கையை சில நிபந்தனைகளுடன் ராஜாஜி ஆதரித்தார். நாடு பூராவிலும் அதற்காகப் பிரசாரமும் செய்தார்.

1942 ஆகஸ்ட் புரட்சி இயக்கத்தில் மகாத்மா, நேரு, பட்டேல் போன்ற பெரும் தலைவர்கள் எல்லாம் சிறையில் அடைபட்டுக் கிடந்தார்கள். நாடு கொந்தளித்துக்கொண்டு இருந்தது. அப்போது ராஜாஜி அந்த ஆகஸ்ட் புரட்சி இயக்கத்தை வன்மையாக எதிர்த்து வந்தார். அவருடைய அரசியல் வாழ்வுக்கு இறுதி தேடிக் கொள்வதற்கு இந்த இயக்கத்தை எதிர்ப்பது போன்ற பைத்தியக்காரத்தனம்

வேறு ஒன்றும் கிடையாது என்று அவருடைய நண்பர்கள் எல்லாம் கருதினுலும் அதை வன்மையாக எதிர்த்தே வந்தார்.

அப்போது நடைபெற்று வந்த உலக மகா யுத்தத்தில் மிகப் பெரும்பாலோர் ஜப்பானும் ஜெர்மனியும் வெற்றி பெறும் என்று சொல்லி வந்தார்கள். ராஜாஜி மட்டும் ''பிரிட்டிஷார் தான் வெற்றி பெறுவார்கள்'' என்று நம்மை அடிமைப்படுத்தி இருந்த பிரிட்டிஷாரை ஆதரித்தே பேசி வந்தார்.

இவ்வாறெல்லாம் அரசியல் நீரோட்டத்தில் எதிர்நீச்சல் அடித்துக் கொண்டிருந்தாலும், மகாத்மாவின் தலைமையில் இயங்கிய அந்த நாள் காங்கிரஸ் பெரும் தலைவர்களின் வருத்தத்துக்கு ஆளானுலும், ராஜாஜிக்கு அந்தக் காங்கிரஸ் தலைவர்களே இந்தியாவில் முதல் கவர்னர் ஜெனரல் பதவியை அளித்துக் கவுரவித்தார்கள்.

இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக பதவி வகித்த முதல் இந்தியர் ராஜாஜிதான். அதற்குப் பிறகு அந்தப் பதவியே இல்லை.

ஒரு காலத்தில் நாட்டு மக்களின் அதிருப்திக்கும்,மகாத்மா காந்தியின் தலைமையில் இயங்கிய காங்கிரஸ் தலைவர்களின் வருத்தத்துக்கும் ஆளான ராஜாஜிக்கு ஏன் அந்தக் காங்கிரஸ் தலைவர்களே கவர்னர் ஜெனரல் பதவியை அளித்துக் கவுரவித்தார்கள்?

ராஜாஜியின் மாசற்ற ஒழுக்கமும், தூய இதயமும், சத்தியத்தில் உறுதியும், அறிவுத் திறமையும், தன்னல உணர்வே இல்லாத பொதுநலப்பணியும் தான் பெரும் தலைவர்கள் ராஜாஜியை ஆதரித்ததற்கு முக்கியமான காரணமாகும்.

இத்தகைய ஒப்பற்ற குணங்களினுல் ராஜாஜி தமிழ் மக்களுக்கும், தமிழ் நாட்டுக்கும் மிகப் பெரிய உயர்வை அளித்திருக்கிருர். அகில இந்தியாவிலும் தமிழ் மக்களின் மேன்மை ஓங்கி விளங்குமாறு தன் அன்பின் பலத்தினுலும், அறிவின் பலத்தினுலும், தியாகத்தின் சக்தியினுலும் செய்திருக்கிருர்.

இந்திய சுதந்திர வரலாற்றில் ராஜாஜியின் சாதனை மகத்தானது. தமிழ்நாடும், தமிழ் மக்களும், அதை எண்ணி பெருமிதம் அடையும் அளவுக்கு மிக உயர்ந்தது,

ராஜாஜியின் பொது வாழ்க்கை, பொது வாழ்க்கையில் ஈடுபடும் ஒவ்வொருவரும் பின் பற்றவேண்டிய மிகத்தூய்மையான வாழ்க்கை.

வாழ்க ராஜாஜியின் புகழ்!



## சக்தி.

அரை குறையாகப் படித்த படிப்பு மக்களை ஏமாற்றும், மேல் நாட்டில் பௌதீக ஆராய்ச்சியில் உச்சஸ்தானம் பெற்றவர்களும் தெய்வத்தை நாடியே அடக்கத்துடனும் மிக்கபக்தியுடனும் நடந்து கொள்கிருர்கள். நாம் காணும் எந்தப்பொருளிலும் அளவுக்கடங்காத சக்தி மறைந்து கிடக்கிறது. அதுவே தேவி, பராசக்தி, பகவதி, ஈசுவரி என்று நம்முன்னேரும் பாரதியும், காந்தியும் வணங்கியது. எந்த உருவமும் தேவியினுடைய கோயிலாகும். – ராஜாஜி.

# அறிவுக்கு விருந்து

பியாரிலால்

அன்று திங்கட்கிழமை வாரந்தோறும் காந்திஜி மௌன விரதம் அனுஷ்டிக்கும் தினம். எனவே, காந்திஜி தாம் கூறுவதைத் துண்டுக் காகிதங்களில் எழுதி சம்பாஷணையை நடத்தி வந்தார். காந்திஜிக்கும் காங்கிரசின் மாபெரும் தலைவரான ராஜாஜிக்கும் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது.

ராஜாஜி சேவாக் கிராமத்துக்கு வந்து சிறிது காலம் தம்முடன் தங்கியிருக்க வேண்டும் என்பது காந்திஜியின் ஆசை. தமது ஆசைக்கு ராஜாஜி இணங்கும்படி செய்யக் காந்திஜி முயற்சி செய்து கொண்டிருந்தார்.

ராஜாஜி: 30-ந் தேதிக்குள் நான் சேவாக் கிராமத்துக்கு வரச் சௌகரியப்படலாம்.

காந்திஜி: அப்படியானல் நீங்கள் கூறும் கெடுவுக்குள் நான் உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருப்பேன்.

ராஜாஜி: தங்கள் விருப்பப்படியே.

காந்திஜி: 'உங்களை எதிர்நோக்கிக் கொண்டிருப்பேன்' என்றால் என்ன அர்த்தம்?

ராஜாஜி: சிற்சில சமயங்களில் அபாயங்களைக் கூட எதிர்நோக்கிக் கொண்டிருப்பது உண்டு.

காந்திஜி: அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன். அந்த அபாயத்தைக் கூட நான் விரும்புகிறேன். பல விஷயங்களை யொட்டி நான் உங்களுடன் குறிப்புகளை (கருத்துக்களை)ப் பரிமாறிக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ராஜாஜி: அதற்குள் நாம் இருவரும் நம் குறிப்புகளில் சிலவற்றை மறந்து விடுவோம் என நம்புகிறேன். பிறகு பரிமாறிக் கொள்வதற்கு எதுவுமே இராது.

காந்திஜி: அப்படியானல் நாம் இருவரும் சேர்ந்து உடம்பு உப்பும்படி சிரிப்போமே.

பிறகு சம்பாஷணை உப்பில்லாத உணவு பற்றித் திரும்பியது.

காந்திஜி: நான் தென்னாப்பிரிக்காவில் பல ஆண்டுகள் வரையில் உப்பில்லாமல் வாழ்ந்திருக்கிறேன். இங்கு நான் அந்த விதியை மாற்றிக் கொண்டேன். எனினும் மேற்கொண்டு பரிசீலனை செய்ததன் மீது மறுபடியும் உப்பில்லா உணவுக்கே வந்து விட்டேன்.

ராஜாஜி: உப்பில்லாப் பத்தியம் இருக்கும்படியான நிர்ப்பந்தத்துக்கு ஆளாவோர், உப்பு வேண்டும் என்ற இயற்கையான ஆசையைத் தீர்த்துக் கொள்வதற்காக சுவர்களை ருசி பார்ப்பது உண்டு; குழந்தைகளைப் போல் மண்ணைத் தின்ன முற்படுவதும் உண்டு.

காந்திஜி: அது அவர்களுக்கு நல்லதுதான். சுவர்கள் அதிக சுத்தமாக இருக்கும்! இது மாதிரியான பேச்சுத்தான், நாம் சேவாக் கிராமத்தில் மனம் விட்டு இஷ்டப்படி சிரிப்பதற்குப் பூர்வாங்கமாகும்.

இச்சமயத்தில் மணி ஒன்பதரை ஆயிற்று. காந்திஜி தூங்கச் செல்வதற்கு நேரமாகி விட்டது.

காந்திஜி: நான் உங்களை நேசிக்க வேண்டுமாயின், இப்போதே நான் உங்களை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டும்.

காந்திஜியும் ராஜாஜியும் கூடிப் பேசுவதை எல்லோரும் எப்போதும் ஆவலுடன் எதிர்பார்ப்பது வழக்கம். ராஜாஜியுடன் பேசும் சந்தர்ப்பத்தைக் காந்திஜியே மிகுந்த ஆர்வத்துடன் எதிர்பார்ப்பார். அவர்கள் எப்போது சந்தித்தாலும் அது புத்தி சாதுர்யம், விவேகம், சிறந்த நகைச்சுவை முதலியவை நிறைந்த விருந்தாகவே இருக்கும்.

## தியாகத்திற்கு பரிசு கேட்காதீர்.

காங்கிரஸ் ஒரு பெரிய அக்னி, ஊழியர்கள் சகலத்தையும் தனக்கு கொடுக்கவேண்டும் என அது விரும்புமே தவிர தன்னிடமிருந்து எதையும் எடுக்க் அனுமதிக்காது.

என்றைய தினம் காங்கிரஸ் காரர்கள் தன் தியாகத்திற்கு பரிசு கேட்கின்றனரோ அன்றே காங்கிரஸ் ஒழியும், கேட்பவனும் காங்கிரஸ் காரனல்ல. முன்னர் ஆங்கிலேயரை எதிர்த்தோம், இன்றைய தினம் நீதிக்காகவும் சத்தியத்திற்காகவும், சமாதானத்திற்காகவும் போராட வேண்டியிருக்கிறது. ஆகவே காங்கிரஸ் காரர்கள் மிகவும் கவனமுடன் இருக்க வேண்டும். இல்லையெனில் நாட்டில் ஏற்படும் துன்பங்களுக்கு காங்கிரஸ் காரர்கள் தான் பதில் சொல்ல வேண்டும்.

[ 2-10-52 கர்நூல் பேச்சு ]

# உலகப்பெரும் தலைவரில் ஒருவர்

பி. சிவராவ்

சென்ற ஆண்டு செப்டம்பர் மாதம். டிரான்ஸ் - அட்லாண்டிக் விமானமொன்றில் ராஜாஜிக்குப்பக்கத்தில் அமர்ந்திருக்கிறேன். அணு ஆயுத சோதனையை நிறுத்தக்கோரும் சமாதான தூது கோஷ்டியினராக நாங்கள் செல்கிறோம். அப்போது நான் என் மனத்துக்குள் இந்தத் தூது வெற்றி பெறும் வாய்ப்புக்களைப் பற்றிச் சிந்திக்கிறேன். ராஜாஜியுடன் நான் செல்லும் இந்தத் தூதுப் பணியைப் பற்றி மட்டும் தான் சிந்தித்தேனு? இல்லை. இதற்கு முன், ஒரு நாற்பத்தைந்து ஆண்டு காலமாக, தேச விடுதலைப் போராட்டத்தின் பல கோணங்களில் எங்கள் இருவரையும் விசித்திரமான தெய்வ சங்கல்பம் எத்தனை சந்தர்ப்பங்களில் பிணைத்து வைத்தது என்பதையெல்லாம் சிந்தித்துப் பார்க்கிறேன்.

முதல் உலக மகாயுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம் அது. அப்போது தான் சென்னை கோகலே மன்ற மேடையில் நான் ராஜாஜியை முதன் முறையாகக் கண்டேன். 'ஹோம்ரூல்' எனப்படும் சுயாட்சி இயக்கம் மக்களைத் தங்கள் பழைய பொந்துகளிலிருந்து வெளிப்படச் செய்து, அவர்கள் கிளர்ச்சி மிகுந்த பொது வாழ்வில் ஈடுபடுமாறு தூண்டிய காலம் அது யுத்தம் முடிந்த பின் பாரதம் சுதந்திரம் பெறும் என்ற அகக் கணகாட்சியில் அப்போது பலருடைய உள்ளத்தின் ஆழத்திலிருந்து உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. ஆனுல் இதோ சென்னை கோகலே மன்ற மேடையில் நான் காணும் இந்த மனிதர் மட்டும் உணர்ச்சி வசப்படாமலே சுயாட்சி இலட்சியத்தை அணுகுகிருர். ஆஹா, அசாதாரண முறையில் பிரச்னைகளைப் பகுத்துப் பார்க்கும் இவரது கூரிய அறிவை என்னவென்பது!

யுத்தமும் முடிந்தது. யுத்தத்தின் முடிவும் காந்திஜி காங்கிரஸின் தலைமையை எய்தியதும் ஏககாலத்தில் நிகழ்ந்தன. அமிருதசரஸ்துயர நிகழ்ச்சிக்குப் பின் ஏற்பட்ட அரசியல் சர்ச்சையில் நானும் ராஜாஜியும் ஒருவரிடமிருந்து மற்றவர் ஓரளவுக்கு விலகி விட்டோம். [உலக மகாயுத்தத்தின் இறுதிக்காலத்திலிருந்து டாக்டர் பெஸண்டு அம்மையார் மிதவாதியாகி விட்டார். காந்தியடிகளோ, சுதந்திர இயக்கங்களை அடக்க உதவும் ரவ்லட் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்வது, பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் படிப்படியாக ஒத்துழையாமை புரிவது முதலிய திட்டங்களைச் செயல் படுத்தி வந்தார். கட்டுரை ஆசிரியர் டாக்டர் பெஸண்டையும், கட்டுரையின் நாயகரான ராஜாஜி காந்திஜியையும் பின்பற்றினர். ரவ்லட் சட்டத்தை எதிர்த்து நாடெங்கும் சத்தியாக்கிரகம் நடந்தபோது அமிருதசரஸ் ஜாலியன் வாலாபாக் தோட்டத்தில் பிரிட்டிஷ் ஆட்சியாளர் நடத்திய பீரங்கிப் பிரயோகத்தில் நூற்றுக்கணக்கான மக்கள் படுகொலை செய்யப்பட்டனர்.]

காந்திஜியின் காந்த சக்தியில் ராஜாஜி ஆகர்ஷிக்கப்பட்டார். அவரோடும், அவரது கொள்கைகளோடும். நெருக்கமாக இணைந்தார். ராஜாஜியை விட மிகவும் எளிய பாகம் ஏற்ற நானே ஸ்ரீமதி பெஸண்டிடம் கொண்டிருந்த விசுவாசத்தில் உறுதியாக நின்றேன். இருந்தாலும் எங்கள் இருவரையும் பிணைத்து வைக்கும் ஒரு விந்தையான சங்கிலியாக இருந்தார். ஜார்ஜ் அருண்டேல் என்ற அன்பு உள்ளம் படைத்த ஆங்கிலேயர் நட்புக்கள் பூணுவதில் அலாதியான திறமை பெற்றிருந்த அருண்டேலும் நானும் ஸ்ரீமதி பெஸண்ட் அம்மையாரின் 'நியூ இந்தியா' பத்திரிக்கையில் பணி செய்த நேரம் போக

எஞ்சிய பொழுதில் சென்னையின் தொழிலாளர்களுக்கு ஒரு சங்கம் அமைப்பதில் ஈடுபட்டிருந்தோம். ராஜாஜி எவ்வாறோ — எவ்வாறு என்பது எனக்கு நினைவுவரவில்லை. இந்தப் பணியில் ஈடுபாடு கொண்டார். நாங்கள் அடிக்கடி பெரம்பூருக்குச் சேர்ந்து செல்வோம். ரயில்வே தொழிற்சாலையைச் சேர்ந்த தொழிலாளிகளுக்கிடையே கூட்டம் போட்டுப் பேசுவோம். அரசியல் நோக்கத்தில் எங்களுக்கு இருந்த மாறுபாடு அப்போது ஒரு பொருட்டாகவே இல்லை. அப்போது ராஜாஜிக்கும் அருண்டேலுக்குமிடையே ஏற்பட்ட நல்லுறவு என்னையும் பற்றிக் கொண்டது. அவ்வாறு ஏற்பட்ட ஆதிகாலத்துத் தொடர்பு என்னுடைய உள் மனத்தில் ஆழப்பதிந்திருக்க வேண்டும்!

சில ஆண்டுகளுக்குப் பின், ஸைமன் கமிஷனைப் பகிஷ்காரம் செய்து காங்கிரஸ் நடத்திய இயக்கம் இடர்ப்பாடுகள் உற்றது. 1928-ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் மகாநாட்டுக்கு ஸ்ரீமதி பெஸண்டும் நானும் சென்ற அதே ரயிலில் ராஜாஜியும் வந்தார். வழியில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் ராஜாஜி என்னிடம் ஒரு யோசனை சொன்னார். சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்துவதால் பொதுமக்கள் உணர்ச்சி வசப்படுவார்கள் என்று ஸ்ரீமதி பெஸண்ட் கொண்டிருந்த பயத்தை கைவிடும்படி அவரை நான் ஊக்க வேண்டும் என்றும், இதன் மூலம் காந்திஜியும் திருமதி பெஸண்டும் ஒன்று சேர்ந்து ஸைமன் கமிஷன் பகிஷ்காரத்துக்கு புத்துயிர் ஊட்ட முடியும் என்றும் ராஜாஜி கூறினார்.

கல்கத்தாவில் நானும் ஸ்ரீமதி பெஸண்டும் தங்கியிருந்தபோது நான் அம்மையாரிடம் ராஜாஜியின் யோசனைக்கேற்ப வாதம் செய்தேன். தனிப்பட்ட பயிற்சி பெற்ற ஒரு சிலர் மட்டும் ஒரு சில சட்டங்களுக்குப் படிய மறுக்கும் முறையில் சட்டமறுப்பு நடத்தினால் ஸ்ரீமதி பெஸண்ட் அதற்கு இணங்கக்கூடும் என்று தோன்றியது. காந்திஜியையும் ஸ்ரீமதி பெஸண்டையும் சந்திக்கச் செய்யுமளவுக்கு நான் வெற்றி பெற்று விட்டதாக எண்ணினேன். ஆனால் என் நம்பிக்கை அற்ப ஆயுளில் மடிந்து விட்டது. தாற்காலிகமாக ஒப்பந்தம் காண நான் வகுத்திருந்த வழியும் ஆபத்தானதே என்று ஸ்ரீமதி பெஸண்ட் கருதத் தொடங்கி விட்டார். என் முயற்சி தோற்று விட்டது. மீண்டும் என் பிரயாசைக்குப் புனர்வாழ்வு தருவதில் பயனிராது என்று நான் ராஜாஜியிடம் வருத்தத்துடன் தெரிவித்தேன்.

மேலும் சுமார் பத்து ஆண்டுகள் ஓடின. முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ்நிலையில் ராஜாஜியும் நானும் மீண்டும் ஒன்று சேர்ந்தோம். 1937-ம் ஆண்டு இளவேனிற் காலத்தில் நடைபெற்ற தேர்தல்களுக்குப் பிறகு கவர்னரின் விசேஷ அதிகாரங்களைப் பற்றி ஒரு சர்ச்சை எழுந்தது. இந்தச் சர்ச்சையில் ஒரு முடிவும் ஏற்படாமல் முறிவு ஏற்படுமெனத் தோன்றியது. பேச்சு முறிந்து போகாமல், 1935-ம் வருஷத்திய அரசியல் சாஸனத்துக்கு உட்பட்டு, காங்கிரஸ் பெரும்பான்மை ஸ்தானங்கள் பெற்றிருந்த மாகாணங்களில் அது மந்திரி சபை அமைக்கவும், அதன் சமூக பொருளாதாரச் சீர்திருத்தத் திட்டத்தை அமுல் செய்வதில் நியாயமான அளவுக்கு கவர்னர்கள் தலையிடாமல் இருக்கவும் உபாயம் காண முடியுமா என்று தலைவர்கள் விசாரப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது நான் "ஹிந்து" "மாஞ்செஸ்டர் கார்டியன்" ஆகிய பத்திரிகைகளுக்குப் புதுதில்லி நிருபராக இருந்தேன். ராஜாஜியுடன் மேற்சொன்ன விஷயமாக விவாதித்து விட்டு இவ்விரு பத்திரிகைகளுக்கும் ஒரே மாதிரி செய்தியை அனுப்பி வைத்தேன். நான் விவரத்தைப் புரிந்து கொண்டிருந்த முறையிலிருந்து முட்டுக்கட்டை ஏற்படாமலிருப்பதற்கு உதவக்கூடிய ஒரு யோசனையை வெளியிட்டிருந்தேன். சுமார் இரண்டு வாரங்களுக்கு அப்புறம் வைஸ்ராயின் மாளிகைக்கு வருமாறு எனக்கு டெலிபோன் செய்தி வந்தது. நான் சென்

றேன். சம்பிரதாய உபசாரங்களில் பொழுதைக் கழிக்காமல் லின்லித்கோ பிரபு நேரடியாக விஷயத்துக்கு வந்தார். 'மான்செஸ்டர் கார்டியனில்' வெளியாகியிருந்த என் குறிப்பைப் பற்றிப் பேசியவாறு தமது தஸ்தாவேசுகளிலிருந்து ஒரு செய்தித்தாள் துணுக்கை எடுத்தார். அதை என் முன் ஆட்டியபடியே, "இந்திய மந்திரியான ஜெட்லண்ட் பிரபு இதை எனக்கு அனுப்பியிருக்கிருர். இந்த யோசனையின் அடிப்படையில் மந்திரிசபை அமைக்குமாறு மிஸ்டர் காந்தி காங்கிரசுக்கு நல்லுரை சொல்லுவார் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள் அல்லவா? எந்த உறுதியின் பேரில் நீங்கள் இப்படி கூறியிருக்கிறீர்கள் என்று விசாரிக்குமாறு ஜெட்லண்ட் எனக்கு எழுதியிருக்கிருர்" என்ருர் ராஜப்பிரதிநிதி.

"இந்தச் சூத்திரத்தின் கர்த்தா ராஜாஜி தான். அவருக்குக் காந்திஜியின் உள்ளம் எப்படிச் செயல் படுகிறது என்று தெரியும்" என்றேன் நான்.

"ஓ, அப்படியா? இது ராஜாஜியின் யோசனை எனில் முற்றிலும் வேறு விஷயமாகும்" என்ருர் லின்லித்கோ பிரபு.

இந்தப் பேட்டியின் விளைவாக நான் முன் திட்டம் ஏதுமின்றிக் காந்திஜியைக் காணச் சென்றேன். அப்போது காந்திஜி பெல்காம் மாவட்டத்தில் ஏதோ ஒரு கிராமத்திலிருந்தார். நான் காந்திஜியைக் கண்ட பின் ராஜாஜியினது யோசனையின் அடிப்படையில் ஓர் அறிக்கை தயாராயிற்று. வார்த்தைகளை சர்வ ஜாக்கிரதையாக உபயோகித்து உருவான இந்த அறிக்கையின் முடிவாகத்தான் காங்கிரஸ் கட்சியானது மந்திரிசபைகள் அமைக்க ஒப்புக்கொண்டது

இரண்டாம் உலக யுத்தம் மூண்டபோது பிரிட்டிஷ் சர்க்காருக்கும் காங்கிரசுக்கும் இடையே தீவிரமான மனவேற்றுமைகள் ஏற்பட்டன. 1939-ம் ஆண்டு இறுதியில் நான் லின்லித்கோ பிரபுவிடம் அவர் தமது நிர்வாகக் குழுவில் (Executive Council) உண்மையான மக்கள் தலைவர்கள் சிலரைச் சேர்த்துக் கொண்டு அதனைப் புனர் நிர்மாணம் செய்ய வேண்டுமென வலியுறுத்தினேன்.

"நீங்கள் யார்யாரைச் சேர்க்கலாம் என்கிறீர்கள்?" என்று கேட்டார் ராஜப் பிரதிநிதி.

"ராஜாஜியையும் பண்டித கோவிந்த வல்லப பந்தையும்" என்றேன். அதைவிட சிலாக்கியமான தேர்வு இருக்க முடியாது என்று கருதினேன்.

வைஸ்ராய் சொன்ஞர்: "எல்லாக் காங்கிரஸ் தலைவர்களும் இவர்களைப் போலவே இருந்துவிட்டால் எனக்கு ஒரு பிரச்னையும் இராது. யுத்தம் நடக்கும் சமயத்தில் வாரத்துக்கொரு நெருக்கடியை உண்டாக்கக் கூடியவர்களை அரசாங்கத்தில் நான் எப்படி வைத்துக் கொள்ள முடியும்.

1942-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், சர்ச்சில் சர்க்காரின் சார்பில் ஸர் ஸ்டாஃபோர்ட் கிரிப்ஸ தமது பிரசித்தி பெற்ற திட்டத்துடன் இந்தியாவுக்கு வந்தபோது ராஜாஜி காங்கிரஸ் தலைவர்களில் தனித்து ஒருவராக நின்ருர். [பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கையை இதர காங்கிரஸ் தலைவர்கள் ஆதரிக்காத காலம் அது. ராஜாஜி ஒருவரே எப்படியும் பாகிஸ்தான் ஏற்பட்டுத்தான் தீரும் என்பதை உணர்ந்து முஸ்லிம் லீக்குடன் சமரசம் செய்து கொண்டு, சுதந்திரம் பெற முயல வேண்டும் என அப்போது கூறி வந்தார். பிரிட்டன் யுத்தத்தில் ஈடுபட்டுள்ள அந்தச் சமயத்தில் காங்கிரஸும், முஸ்லிம் லீக்கும் விவேகமாக நடந்து கொண்டால் சுதந்திரம் பெறமுடியும் என்று ராஜாஜி கூறியதற்கும் மற்றவர்கள் இணங்காமல் கிளர்ச்சிகளைப் பற்றி நினைத்து வந்த சமயம் அது ]

கிரிப்ஸ் நடத்திய பேச்சு வார்த்தைகளில், யுத்தப் பாதுகாப்பு விஷயமாகப் பேதக் கருத்துக்கள் நிலவியதால், ஆரம்ப நிலையிலேயே பேச்சு முறிந்தது.

ஒரு நாள் காலே கிரிப்ஸ் என்னிடம், ''எனக்கு ஒரு வழியும் தெரியவில்லே. ஸாப்ரு ராஜாஜி, பி. என் ராவ் மூவரையும் கூட்டி ஒரு சமரசத் திட்டம் வகுக்க முயல்கிறீர் களா?'' என்று கேட்டார்.

அன்றிரவே மேற்சொன்னவர்களுடன் ஸ்ரீவி. பி. மேனனும் சேர்ந்து சிலமணிநேரம் விவாதித்தோம். அதன் பயனுக யுக்தமான ஒரு திட்டம் உருவாயிற்று. மறுநாள் காலே அந்தத் திட்டத்தைப் பெற்ற கிரிப்ஸ் மிகவும் நன்றி தெரிவித்தார். திட்டத்தினுல் திருப்தி கரமான முடிவு ஏற்படும் என்றே ராஜாஜி யும் நம்பினுர். ஆனுல் அப்படி நடைபெற வில்லே. பிரிட்டிஷ் சர்க்காருடனே, முஸ்லீம் லீகுடனே எவ்வித சமரசமும் செய்து கொள்ள மற்ற காங்கிரஸ் தலேவர்கள் இசையவில்லே.

கிரிப்ஸின் தூது தோல்வியுற்றபின் ராஜாஜிக்கும் அவரது காங்கிரஸ் சகாக் களுக்கும் கருத்து மாறுபாடுகள் அதிகரித் தன. மகாயுத்தத்தில் பிரிட்டன் தத்தளித்துக் கொண்டிருந்தபோது, ''வெள்ளேயனே வெளியேறு'' என்பதாக இயக்கம் நடத்து வதை ராஜாஜி அங்கீகரிக்கவில்லே. 'பாதாள'த் தொண்டர்களின் உற்சாக மிகுதி யில் நடைபெற்ற நாச வேலேகளேக் கண்டு அவர் ஆழ்ந்த வேதனே கொண்டார். எனினும், யுத்தகாலம் முழுவதிலும், மேடைக்குப் பின்னுலிருந்தபடியே சமரஸம் காணுவதில் அவர் முனேந்து செயலாற்றி வந்தார். அமெரிக்க ஜனுதிபதி ரூஸ்வெல்ட் டின் விசேஷ தூதராகப் புதுதில்லியில் பணி யாற்றிய வில்லியம் ஃபிலிப்ஸ் உருப்படியான யோசனேகளேச் சொல்லும் தலேசிறந்த ஓர் அரசியல்வாதி ராஜாஜி என மதித்து, அவரது முடிவுகளேயே பெரும்பாலும் ஏற்று வந்தார். (வில்லியம் ஃபிலிப்ஸைச் சென்ற ஆண்டு ஹார்வர்ட் சர்வகலாசாலே விழாவில் சந்திக்கும் நல்வாய்ப்பு எங்களுக்குக் கிடைத் தது).

இதன் பின் பத்தாண்டுகளுக்கு மேலாக நான் ராஜாஜியுடன் கொண்டிருந்ததொடர்பு மிகவும் குறைந்து விட்டது. 1962-ம் ஆண்டு கோடையில் புதுதில்லியில் நடைபெற்ற அணு ஆயுத எதிர்ப்பு மகாநாடுதான் எங்களே புதியதொரு துறையில் ஒன்று சேர்த்தது. காந்தி சமாதானக் கழகத் தின் சார்பில் இந்தியாவிலிருந்து ஒரு தூது கோஷ்டி செல்ல வேண்டும் என்று நான் அப்போது யோசனே தெரிவித்தேன். அது உடனே ஆமோதிக்கப்பட்டது என்ருலும் சில மாதங்கள் ஆகும் வரையில் எந்த நட வடிக்கையும் எடுக்கப்படவில்லே. ராஜாஜி யைத் தூது கோஷ்டியின் ஓர் அங்கத்தின ராக இருக்குமாறு அழைத்திருக்கிருர்கள் என்று நான் செப்டம்பர் மாதத்தில் கேள்விப் பட்ட போது அது என் மனத்துக்கு உகந்த ஓர் அதிசயமாக இருந்தது. நான் இல்லா மல் அவர் செல்ல விரும்பவில்லே என்றும் சொல்லப்பட்டது. மேற்கு நாடுகளுக்கு ஒரு தூது கோஷ்டியும், மாஸ்கோவுக்கு இன் னென்றுமாகச் செல்ல இருந்ததால் பயன் விளேயும் என்பதில் அவருக்கு நம்பிக்கை யில்லே.

எனினும் ராஜாஜி இல்லாமல் தூது கோஷ்டிக்குப் போதிய அந்தஸ்து இருக் காது என்று கருதப்பட்டது. அவரை மேல் நாட்டு யாத்திரைக்கு ஊக்குமாறு நான் சென்னேக்கு அனுப்பப்பட்டேன். மகத்தான இடுக்கண்களே மீறித் தூது கோஷ்டியால் வெற்றி காண்பது சாத்தியமா என்பது பற்றி ஆலோசித்தோம். வெற்றிக்கான சாத்தியக் கூறுகள் மிகவும் எட்டியே உள்ளன என் பதை நான் ஒப்புக் கொண்டேன்.

'இருந்தாலும் ஒரு முயற்சியைச்செய்து பார்ப்பதில் தவறில்லே. தூது கோஷ்டியால் இந்தியாவுக்கு உலகின் நல்லெண்ணம் என்ற நிதியத்தைப் பெற்றுத் தரமுடியும் என்று நம்புகிறேன். இதற்காக மனித சக்தி யையும் பணச்செலவையும் தந்து பார்க்கலா மே!' என்றேன் நான். ராஜாஜி இணங்கி னுர்.

நான் ஆச்சரியமடைந்தேன் என்பதை ஒளிக்காமல் சொல்கிறேன்.

உடனடியாகப் பலன் காணுவிடினும், ஸ்தூலமாகப் பலன் பெருவிடினும், எங்கள் தூது கோஷ்டி ஒரு நிரந்தரமான நல்லபிப் பிராயத்தை எப்படியேனும் பதிவு செய்யும் என்று உள்ளூற நான் நம்பினேன். இந்த நம்பிக்கைதான் வாஷிங்டனிலும், நியூயார்க் கிலும், லண்டனிலும் எங்கள் அலுவலின் போதெல்லாம் தெம்பளித்தது. தினந் தோறும் நாங்கள் கண்ட விளைவுகளிலிருந்து என் நம்பிக்கை வலுப்பெற்று வந்தது.

நாங்கள் வாஷிங்டன் சென்ற அன்று ஜனுதிபதி கென்னடியின் பேட்டிக்காக எங்கள் கார் வெள்ளை மாளிகையின் வெளி வாயிலுக்குள் நுழைந்தபோது ராஜாஜி என் பக்கம் திரும்பினுர். அவர் பார்வையில் நம்பிக்கையின்மையின் சாயல் தெரிந்தது

"நான் களைத்திருக்கிறேன். கென்னடி அவர்களிடம் என்ன சொல்லப் போகிறேன் என்பதே தெரியவில்லை" என்ருர்.

"எல்லாம் நல்லபடியாகும், கவலைப்பட அவசியம் இல்லை'' என்றேன் நான்.

நான் சொன்னது எவ்வளவு சரியாகப் போயிற்று!

முப்பத்தைந்து நிமிஷங்களுக்குக் கென்னடி ராஜாஜி பேசுவதைக் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தார்.

இந்த முதுமகனுர் சகல ஜீவராசிகளின் சார்பிலும் விடுத்த வேண்டுகோளின் ஆழ்ந்த அந்தரங்க சுத்தத்தில் கென்னடி அப்படியே வசியமாகி விட்டார்.

சர்ச்சைக்கு இடமளித்த பாதாளச் சோதனையை நீக்கி, மற்றச் சோதனைகளை ரத்து செய்யும் விஷயத்தில் வல்லரசுகள் உடன்பாடு காண வேண்டும் என்பதே ராஜாஜி அளித்த சூத்திரம். உடனடியாக இப்படி ஓர் உடன்பாடு காண முடியும் என்ற நம்பிக்கை கென்னடியைச் சந்தித்தபின் எங் களுக்கு ஏற்பட்டது. 1962-ம் ஆண்டு இறுதிக்குள் உடன்படிக்கை ஏற்படும் என்ற தன்னம்பிக்கை ஓங்க, நியூயார்க்குக்குச் சென்ருேம். அங்கு பிரான்ஸின் வெளி நாட்டு மந்திரியைக் கண்டு பேசியவுடன் அந்நாட்டின் மனப்போக்கும் சாதகமாகத் திரும்பக் கூடியதே என்று தெளிந்தோம். எல்லாருக்கும் மேலாக ருஷ்ய வெளிநாட்டு மந்திரி குரோமிகோ அவர்கள் விட்டுக் கொடுத்துப் பேசியது ஆச்சரியமாக இருந்தது.

இவ்வருடம் ஜுலை மாதத்தில் சோவியத் யூனியன், பிரிட்டன், அமெரிக்கா ஆகியவை அணு சோதனை ரத்து விஷயமாக உடன் படிக்கை செய்து கொண்டதைப் பற்றிப் பத்திரிகைச் செய்திகளைப் பார்த்தபோது என் எண்ணங்கள் தம்மையறியாமல் ராஜாஜியிடம் சென்றன.

சென்ற ஆண்டு நாங்கள் தூதுப் பணி புரிந்த பதினைந்து நாட்களின் பலப் பல சந்திப்புகளில் ராஜாஜியைச் சந்தித்த தலைவர் களில் யாராலுமே, அணுப் போரின் பயங் கரத்திலிருந்து மனித குலத்தைக் காப்பதற் காக ஓர் எண்பத்தைந்தாண்டுத் தொண்டு கிழவர் சாந்தித் தூது சென்றதை மறக்க முடியாது.

பூரண வெற்றி காண இன்னும் எவ்வள வோ நடந்தாக வேண்டியிருக்கிறது. ஐ.நா. பொதுச் சபையிலும், ஜினீவா ஆயுத பரிகரண மகாநாட்டிலும் விவாதிக்கப்படவிருக்கும் சிக் கலான பிரச்னைகளைத் தீர்க்க எல்லையற்ற பொறுமையும், புத்தித்திட்பமும், மனித குலத் திடம் நன்னம்பிக்கையும் தேவைப்படுகின் றன. இந்தச் சபைகளுக்கு இந்தியாவின் பிரதிநிதியாக ராஜாஜி சென்றிருந்தால் மிகவும் சிறந்த தேர்வாக இருந்திருக்கும். அப்படி ஒரு வாய்ப்புக்கிட்டாவிடினும், ராஜாஜி இது வரையில் ஆற்றியுள்ள பணிகளுக்காக வே அவர் உலகப்பெரும் தலைவர்களில் உன்னதமான ஒரு ஸ்தானத்தைப் பெற்றிருக்கிருர்.



# காந்திஜி - ஜின்னு சந்திப்பு

1943ல் சிறையிலிருந்த காந்திஜியைச் சந்தித்தார். காந்திஜி "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்.

தமது திட்டத்தை ஒரு சிறுதுண்டுக் காகிதத்தில் எழுதி காண்பித்தார் ரராஜாஜி,

"இவ்வளவுதானு? இதை நான் ஒப்புக் கொள்வேனே!" என்ருர். அது மட்டுமன்றி அத்திட்டத்தின்படி வேலைசெய்யும் படியும் பணித்தார்.

ஆனல் இதில் வேடிக்கை என்னவென்ருல் ராஜாஜி பேசிவந்தபோது எந்த காந்திமகான் "நான் சொல்வதற்கும் ராஜாஜி சொல்வதற்கும் வெண்ணெய்க்கும் சுண்ணும்புக்கும் உள்ள வித்தியாசமிருக்கிறது" என்று அறிக்கைவிட்டாரோ, அதே காந்திஜிதான் இப்பொழுது 'நீங்கள் சொல்வதும் வெண்ணெயாகத்தானே' இருக்கிறது என்ருர். எனினும் காந்திஜி ஒப்புகொண்டு விட்டார் தமது திட்டத்தை என்று அறிக்கைவிடவில்லை. மகிழ்ந்து போகவுமில்லை.

காந்திஜி சிறைக்கூட சூழ்நிலை காரணமாகத் தமது திட்டத்தைக் ஒப்புக் கொண்டாரோ என்னவோ, பொறுத் திருப்போம் என்றிருந்தார். சுமார் ஒன்றரை ஆண்டுகாலம் காந்திஜி முதலிய தலைவர்கள் சிறையினின்று விடுதலையாகி வெளியில் வரும்வரை யாரிடமும் காந்திஜி தமது திட்டத்தை ஒப்புக் கொண்டார் என்பதை வெளியிடாமல் பொறுத்துக் கொண்டிருந்தார். ஆம். அன்று அவரை மக்கள் எப்படி யெல்லாம் வைதார்கள் அவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தார். 1945-ல் யுத்தம் முடியும் தறுவாயில்—நேசநாடுகளுக்கு வெற்றிமுகம் காணத் தொடங்கியதும்—தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். காந்திஜியைச் சந்தித்தார். காந்திஜியும் தாம் நல்ல புத்தி தெளிவோடுதான் ராஜாஜி திட்டத்தை ஒப்புக் கொண்டதாக உறுதியளித்தார். அதற்குப்பின்தான் காந்திஜி ஜின்ஞ சந்திப்பு என்னும் பாரத நாட்டுச் சரித்திரத்தில் முக்கியம் பெற்ற நிகழ்ச்சி நடந்தது.

# கடவுளின் கையில் ஒரு கருவி

ஆர். ஆர். திவாகர்

பொது வாழ்வில் ஈடுபட்ட பெரியா ரொருவர் எண்பத்தியாருவது பிறந்த தினத்தைக் கொண்டாடக் காணக் கிடைப்பது இந்தியாவில் மிகவும் அரிய சம்பவமாகும். முதிர்ந்த பருவத்தை அடைவதில் மட்டும் விசேஷம் எதுவும் கிடையாது. ஆனால் இந்த வயதிலும் ஒருவர் பூரண சக்தியோடு உழைத்து ஆக்கப் பணி புரிவாரேயாகில் அவரை வாழ்த்தத்தான் வேண்டும் அவரை மட்டுமல்ல, அவர் யாரிடையே பிறக்கிறுரோ, அவரது தனிப்பட்ட சேவையினுல் யார் பயன் பெறுகிறுர்களோ அந்த மக்களையுமே வாழ்த்தத்தான் வேண்டும்.

சமீபத்தில் இப்படி நீண்ட நாள் வாழ்ந்த பெரியோர் சிலருண்டு. ஸர். எம். விசுவேசுவரய்யா, கார்வே, பகவான்தாஸ் போல எண்பத்தைந்து ஆண்டுக்குப் பின்னரும் அவர்கள் சக்தியுடனும், சுறுசுறுப்புடனும் விளங்கினர். எனினும் இவர்களில் ராஜாஜியோ தனித்தன்மை பொருந்தியவராக விளங்குகிறுர்.

அவர் பெற்றுள்ள முக்கியத்துவம் ஈடு இணையற்றது. தேச சுதந்திரத்துக்காக அவர் வாழ்ந்த தியாக வாழ்வும், சுதந்திரத்துக்குப் பின் பற்பல ஹோதாக்களில் அவர் ஆற்றிய பொதுப் பணியும் தனியொரு ஸ்தானத்தில் வைத்து மதிக்கப்பட வேண்டியவை. மிக எளிமையான அடிப்படை மீது பிரத்தியேக வாழ்வை அமைத்துக் கொண்ட அவர் பொதுப் பணியிலும், பொது நடவடிக்கையிலும் அதி உன்னதமான கொள்கைகளைக் கடைப்பிடித்தார். அப்பழுக்கற்ற நிர்வாகக் கலையில் அவர் புகுத்தியுள்ள புது அம்சங்கள் உலகறிந்தவை. தமது திட நம்பிக்கைகளைப் பின்பற்றுவதில் அவருக்குள்ள துணிவு காரணமாகத்தான் அன்று அவர் காந்தி மகாத்மாவுடன் மாறுபடக் கூடத் தயாராக இருந்தார். அந்த துணிவுக்கு ஈடாக எதையேனும் சொல்வதென்ருல், எண்பத்திரண்டாவது பிராயத்தில் அவர் தனியொரு மனிதராக ஆளும் கட்சியை எதிர்த்துப் புதுக்கட்சி யொன்றை ஸ்தாபித்ததைத்தான் குறிப்பிட வேண்டும். ராஜாஜி தான் சுதந்திரக் கட்சியை ஸ்தாபித்தார். தி. மு. க. போன்ற கட்சிகளுக்கு ஏன் அவர் ஆதரவு தருகிறுர் என்று சிலர் கேட்கக் கூடும். இதற்கு ஒரே விடை அவர் தமது கோணம் முற்றிலும் சரியானது என்று நம்புவதுதான். தாம் செய்வது சரி என்று அவர் உறுதி பெற்று விட்டாரெனில், அதன் பின் அவர் அந்தப் பாதையிலே முன்னேறுவார் எத்தனை ஆபத்துக்கள் ஏற்படுமாயினும், நண்பர்களும் சகாக்களும் எவ்வளவு எதிர்த்தாலும் பொருட்படுத்த மாட்டார். உண்மையைச் சொன்னுல், அவருக்குத் தமது சிந்தனைகளையும், உறுதியான நம்பிக்கைகளையும் தவிர வேறு நண்பரோ, சகாவோ கிடையாது. அறிவு வாதம் என்பதே அவரது வழிகாட்டியும் குருவும். விட்டுக் கொடுக்காத தமது கூரிய அறிவு வாதத்தால் அவர் பிறரது வாதங்களை மட்டும் வெட்டுவதில்லை, தம்மையுமே அறிவு வாதம் என்ற கத்தி முனைக்கு உட்படுத்திக் கொள்கிறுர். மிக மிக மென்மையும், பேரன்பும் கொண்ட இதயம் படைத்தவர் ராஜாஜி, என்ருலும் அறிவு வழியே வாதம் புரியும் போது இந்த மென்மையும், அன்பும் மறைந்து நிற்கின்றன.

தமது உறுதியான கருத்துக்களைத் தீரத்துடன் பின்பற்றி அவர் வகுத்த கொள்கைகள் பல, சென்னை முதல் மந்திரியாக இருந்தபோது அவர் அமுலாக்கிய மது விலக்கு, உணவுக் கட்டுப்பாட்டு ரத்து இவை இந்தத் தீரத்துக்குச் சான்ருகும். அவரது கொள்கைகளை ஏற்க முடியாதவர்கள் இருக்கலாம்; இருக்கிருர்கள். எனினும், இவர்களும் அவர் எப்படி தமது கருத்துக்களைச் சத்திய மான சித்தத்துடன் தளராமல் பின்பற்றுகிருர் என்பதை உணர்ந்தே ஆக வேண்டும்.

ராஜாஜியின் வாழ்வில் இரு மகத்தான விஷயங்களை மதிக்க வேண்டும் முதலாவது, அவர் ஆங்கிலம் தமிழ் இரண்டு இலக்கியங்களுக்கும் ஆக்க ரீதியில் ஆற்றியுள்ள பணி· அவரது எழுத்து பொது ஜன ரஞ்சகமாக இருக்கும்போதே பொருளாழம் பெற்று விளங்குகிறது.

வழக்கிலுள்ள மொழி, எளிய விளக்கங்கள், எண்ணத் தெளிவு, தமது பொருளுக்கு அவர் சிக்கலின்றி எழுத்துருவம் தரும் பாங்கு, இவையே அவரது நூல்களைப் பண்டிதர் பாமரர் இருசாராரும் விரும்புவதற்கு முக்கிய மான சாதனங்கள் எனலாம்.

ராஜாஜியின் மறுக்க முடியாத இரண்டாவது பெருமை அவர் அணுஆயுதசோதனை பற்றியும், அணு ஆயுதப்போர் குறித்தும் தொடக்க காலத்திலிருந்தே எதிர்ப்பு முன்னணியைஎடுத்துக்கொண்டு அதனைவிடாமல் தொடர்ந்து வருவதாகும். இந்தியா அணு சக்தியை நாச வேலைக்குப் பயன்படுத்தாது என்ற சர்க்கார் கொள்கையைப் பிரதமர் 1954லேயே வெளியிட்டிருக்கிருர்; 1958-இல் அணு சோதனைத் தடையில் வல்லரசுகளின் உடன்பாடு ஏற்பட வேண்டும் என்றும் கூறினர். சர்க்காரின் கொள்கை ஒருபுற மிருக்க, இந்தியப் பிரஜைகளில் ஒருவர் என்ற முறையில் மற்ற இந்திய மக்களின் சார்பில் – ராஜாஜி அணுப்போருக்கு எதிர்க் குரல் எழுப்பி, அணு வல்லரசுத் தலைவர்களுக்கெல்லாம் சோதனைகளை நிறுத்தும் படியும் அணு ஆயுத ஆபத்தைத் தவிர்க்கும் படியும் இடையருமல் எழுதி வந்தார். ராஜாஜி தமது உள்ளார்ந்த ஆர்வத்தையும். பிறரைப் புது வழிக்குத் தூண்டுகிற ஆற்றலையும் பயன்படுத்தி, அணு சாதனைகளை நிறுத்து மாறு வல்லரசுகளை மனிதகுலத்தின் பெயரில் கேட்டுக்கொள்ள வேண்டும் என்று காந்தி சமாதானக் கழகம் கருதியது மிகவும் பொருத்தமேயாகும்.

"அணு ஆயுத சோதனையால் மற்ற நாடுகளின் சூழலை மாசுபடுத்த உங்களுக்கு ஏது உரிமை?" என்று ராஜாஜி அணு வல்லரசுகளைத் தயங்காமல் கேட்டார். இந்தக் கேள்வியைத் தொடர்ந்து, "இது எந்த நாட்டின் சட்டத்துக்கும், சர்வதேசச் சட்டத்துக்கும் விரோதமாகும் இது மனிதப் பண்புக்கே விரோதமாகும்". என்ருர்.

கடைசியில், அணு ஆயுத சோதனைத் தடையும் ஏற்பட்டுவிட்டது. அது பூரணமாக ஏற்படவில்லை என்பது உண்மைதான். எனினும், உலகச் சூழலை விஷமாக்கி, இன்றைய மக்களையும், எதிர்கால மக்களையும் ஆபத்துக்குள்ளாக்கிய படுபாதகத்தை எதிர்த்துத் தங்கள் குரல் எழுப்ப இந்திய மக்கள் தவறவில்லை என்ற பெருமையை ராஜாஜி தேடித் தந்திருக்கிருர்.

சென்ற ஆண்டு செப்டம்பர் மாதத்தில் ராஜாஜி எங்களில் ஒருவராக தூதுப்பணியில் சென்ருர். உலக சமாதானத்தை விரும்பி அவர் ஆற்றிய பணிகளுக்கு இது மகுடமாக அமைந்தது எனலாம். தூதுப்பணி நடை பெற்ற அந்தப் பரபரப்பு மிகுந்த நான்கு வாரங்களில் அவர் செயல் புரியும் பாங்கைக் கண்டபோது எங்களுக்கு அவர் வயோதிகர் என்றே, அவரது சக்திகள் குன்றி விட்டதாகவோ, தமது காரியத்தில் அவர் அவநம்பிக்கை கொண்டிருப்பதாகவோ தோன்றவே யில்லை. தாம் கடவுளின் கையில் உள்ள ஒரு கருவி என்பதை அவர் உணர்ந்திருப்பதாகவே தோன்றியது. தம்மால் நிறைவு

பெறவேண்டிய ஒரு திருப்பணி யிருக்கிறது என்று அவர் அறிந்திருந்ததாகத் தெரிந்தது. அந்தப் பணிக்கே தம்மைஅளித்துக்கொண்டு அந்தப் பணியில் தீவிரமான பக்தி ஓதினர். அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் அவர் புரிந்த தொண்டு வாடிகனில் அவர் போப் ஆண்டவரைக் கண்டு அவரது அநுதாபத் தையும், ஆதரவையும் பெற்றதோடு பூர்த்தி யாயிற்று.



# வேதாரண்ய யாத்திரை

**கொத்தமங்கலம் சுப்பு**

தமிழ் நாட்டுக்குச் சக்கரவர்த்தி தலைவர் ராஜாஜி
சாதி வித்தியாசம் பார்க்காதவராம் தலைவர் ராஜாஜி
சலுகை காட்டுற பழக்கம் இல்லாத் தலைவர் ராஜாஜி
சத்தியம் பேசத்துணிஞ்சவரையா தலைவர் ராஜாஜி
அபவாதத்துக்குக் கஞ்சிடமாட்டார் ஐயன் ராஜாஜி
அணுவளவும் பொய் சொல்லா மெய்யன் ஐயன் ராஜாஜி
தொண்ணுத்தாறு தொண்டர் சூழத் தூயோன் புறப்பட்டார்.
தொண்ணுத்தாறு தத்துவஞ்சூழத் துறவி புறப்பட்டார்.
உப்பை யெடுத்தார் கடலைப்பார்த்தார் தலைவர் ராஜாஜி
உபநிஷதத்தின் உண்மை கண்டார் தலைவர் ராஜாஜி
உப்புங்கடலும் ஒன்றேயென்றார் தலைவர் ராஜாஜி
உயிருங்கடவுளும் போலேயென்றார் தலைவர் ராஜாஜி
செப்புங்கடவுள் கடலைப்போலே யென்றார் ராஜாஜி
ஜீவர்களெல்லாம் உப்பைப் போலேயென்றார் ராஜாஜி
கல்லைப்போலே கண் முன்னாலே காணும் கடலுப்பும்
கரைந்தே போம் கடலுக்குள்ளே யென்றார் ராஜாஜி
உப்புங்கரையும் கடலும் கரையும் உலகுங்கரையுமையா
ஒரு தனி முதலாம் உண்மைக்குள்ளே யென்றார் ராஜாஜி
உண்மை தன்னைக் காப்பது தானே உலகில் பெரிதென்றார்
உடம்பை யெடுத்தாலுண்மைக்காக உழைக்க வேண்டுமென்றார்.
ஞானிகளுக்கே சிறந்த ஞானி தலைவர் ராஜாஜி
ஞாயங்கண்டே உப்பை யெடுத்தார் தலைவர் ராஜாஜி

—காந்தி மகான் கதையிலிருந்து

## புனர்வசுவா? ரோஹிணியா?

ராஜாஜி பிறந்தது பகுதான்யவருஷம், ஆங்கிலக்கணக்குப்படி 1879ம்ஆண்டு. இந்தவிபரம் தமிழ்நாட்டுக்கு முதன்முதல் எப்படித் தெரியவந்தது என்ருல், 1938 ஏப்ரல்மாதம் பதின்மூன்ரும் தேதி பகுதான்ய வருஷப்பிறப்பு வந்ததல்லவா? அன்று சென்னையில் ஒரு விழாவுக்கு ராஜாஜி தலைமை தாங்கினுர். விழா ஆனந்த விகடன் காரியாலயத்தில் நடந்தது. அந்த ஆண்டில் ஆனந்த விகடன் நடத்திய இலக்கியப் போட்டியில் தங்கப்பதக்கம் பரிசு பெற்றவர்களுக்கு, மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் தமது கையினுல் பதக்கத்தை வழங்கினுர். ராஜாஜி அப்பொழுது சென்னை மாகாணத்தின் பிரதமமந்திரி. அவர் விழாவுக்குத் தலைமை வகித்தார். பரிசு பெற்றவர்களில் நானும் ஒருவன் என்ற முறையில் விழாவுக்குச் சென்றிருந்தேன்.

ராஜாஜி தமது தலைமை உரையை ஆரம்பித்தார் ; இன்று பகுதான்யவருஷத்தின் ஆரம்பநாள். இதை நினைக்கும் போது அறுபது ஆண்டுகளுக்கு முன்பு இதே பகுதான்யவருஷத்திலே தான் நான் பிறந்தேன் என்ற விஷயத்தை உங்களுக்குச் சொல்லு கிறேன்.

ராஜாஜியின் ஜன்ம நட்சத்திரம் புனர்வசு என்றும் பிறந்த மாதம் தமிழ்க் கணக்குப்படி கார்த்திகை என்றும் தெரிகிறது. இத்தனைதான் தம்முடைய பிறந்ததினத்தைப் பற்றி ராஜாஜி சொல்லும் விஷயங்கள். ஒருவர் ராஜாஜியிடம் சிலர் ரோஹினி நட்சத்திரம் என்று எண்ணிவருவதை பிரஸ்தாபித்த போது அவர் மௌனமாக சிரித்தார். ''கண்ணன் பிறந்தது ரோஹிணி. நான் பிறந்தது ஸ்ரீராமன் பிறந்த **புனர்வசு!**'' என்று சிரித்துக் கொண்டே சொன்னுர்!

## சர்வ தந்திர சுதந்திரர்.

நமக்குத்தெரிந்தவரை இந்தக்காலத்தில் இந்த அடை மொழிக்கு ஏற்ற ஒருவர் ராஜாஜி. பென்சில் சீவுவது, படுக்கையோ மூட்டையோ கட்டுவது, ஊசியில் நூலைக் கோத்துக் கிழிந்து போன துணியைத் தைப்பது, கை நிதானத்திலேயே கடிதக்கவரைத்தூக்கிப்பார்த்து அதற்கு இத்தனை அணு ஸ்டாம்பு ஒட்டவேண்டும் என்று நிர்ண யித்து ஒட்டுவது, இப்படி எத்தனையோ காரியங்கள் பிறருக்கு வேலை கொடுக்காமல் தாமே தமது கையால் செய்து கொள்வார் ராஜாஜி!

— சோமு

*நன்றி ''கல்கி''*

# நன்றியுரை.

திருநெல்வேலி எழுத்தாளர்களும், மதிப்பிற்குரிய பெரியோர்களும் மனமுவந்து ராஜாஜி மலருக்கு எழுதியிருக்கிருர்கள். அவர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி மதிப்பிற்குரிய திரு பி. ஸ்ரீ. ஆச்சார்யா அருமையான ஒரு விஷயத்தை குறிப்பிட்டுள்ளார்கள். திரு. ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கள் எவ்வளவோ வேலைகளுக்கிடையில் அருமையான கட்டுரை வழங்கியுள்ளார்கள். திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் ராஜாஜியின் குண நலத்தை அருமையாக படம் பிடித்து காட்டியுள்ளார்கள். திரு. சுந்தா அவர்கள் கல்கியின் கட்டுரைகளிலிருந்து தொகுத்து தந்துள்ளார் கள். மூவருக்கும் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். பெருமை சேர்க்கும் ராஜாஜியின் எழுத்தோவியங்களை ஆங்காங் கே சேர்ப்பதற்கு மதிப்பிற்குரிய C. R. நரசிம்மன் அவர்கள் அனுமதி தந்தார்கள். கல்கி கி. ராஜேந்திரன் அவர்கள் தன் கட்டுரையையும் தந்து கல்கியில் வெளி வந்துள்ள கட்டுரை களையும் பிரசுரிக்க அனுமதியளித்துள்ளார்கள். தீப. நடராஜன் அவர்கள் தன் கட்டுரையும் தந்து தாத்தாவின் கட்டுரையையும் பெயர்த்தெழுதி அனுப்பினுர்கள். தனிப்பட்ட முறையில் இவர் களுக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். எஸ். வி. எஸ். சேலம் தந்த செல்வர் என்ற பிரசுரத்தை அனுப்பித் தந்தார்கள். திருச்செங்கோடு ஆசிரம நிர்வாகி கௌரி அவர்கள் ப்ளாக் தந்து உதவினுர்கள். மலர் கமிட்டி உறுப்பினர்கள் யாவரும் பல செய்திகள் உள்ள பல பிரசுரங்களை எங்களுக்கு அனுப்பினுர்கள். அனைவருக்கும் நன்றி.

இந்த மலர் வெளியிடுவதற்கு உதவியவர்கள் வர்த்தக நண்பர்கள், மனமுவந்து அவர்கள் விளம்பரம் தந்து ஊக்கம் அளித்தார்கள். அவர்களுக்கு எங்கள் பெருமிதமான நன்றி உணர்ச்சியை சமர்ப்பிக்கிருேம். இம்மலர் ஆராய்ச்சி மாணவர் களுக்கு பயன்பெறும் விதத்தில் உருவாகியிருக்கிறது. இதை நல்ல முறையில் அச்சடித்து தந்த சரவணு அச்சக ஊழியர்களுக்கு எங்கள் நன்றி. மீண்டும் எழுத்தாளர்கள் அனைவருக்கும் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். திரு. R. S. நல்லபெருமாள் அவர்களுக்கும், திரு. T. R சங்கர நாருயணன் அவர்களுக்கும் என் தனிப்பட்ட முறையில் நன்றியை தெரிவித்துக் கொள்கி றேன். வணக்கம்.

— V. S. வேங்கடாச்சாரி.

# கர்மயோகி ராஜாஜி

**ஸ்ரீ பிரகாசா**

பல்குன் நதிக்கரை ஓரம்; புத்தபகவான் நிர்வாணம் அடைந்த போதி மரத்தருகில்; பக்தி வாய்ந்த இந்துக்கள் எண்ணற்ற நூற்றாண்டுகளாகத் தங்களது மூதாதையின் ஆத்மாக்கள் சாந்தி யடைவதற்காகச் சிரார்த்த சடங்குகள் செய்துவரும் கலா நகரம்.

1922-ம் ஆண்டு டிசம்பர் மாதம் குளிர் காலம் ஏராளமான மக்கள் காங்கிரஸ் மகா சபையின் வருஷாந்தரக் கூட்டத்துக்காகக் கூடியுள்ளனர். எங்கே பார்த்தாலும் ஒரே வெள்ளைக்கூடார மயமான காட்சி கண்ணைக் கவர்ந்தது. நாட்டின் பல பாகங்களிலிருந்து கூடிய மக்கள் தங்குவதற்காக இந்தக் கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மகாத்மா காந்தி இன்னும் விடுதலை செய்யப்படவில்லை. சித்தரஞ்சன தாஸரும் மோதிலால் நேருவும் சிறைக்கூடங்களிலிருந்து வெளியே வந்து சும்மா இருக்கவில்லை. காங்கிரசின் அச் சமய திட்டங்களையும் லட்சியங்களையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர்.

1921-ம் ஆண்டு கிளர்ச்சி முடிவடைந்து விட்டது. சிலர் கூறிய மாதிரி பிசுபிசுத்து விட்டது. சட்ட மறுப்பு விசாரணைக் கமிட்டி தனது யாதாஸ்தை வெளியிட்டு விட்டது. ஸ்ரீ வித்தல்பாய் படேல், ஹகீம் அஜ்மல்கான் பண்டித மோதிலால் நேரு மூவரும் சட்ட சபைகளில் பிரவேசிக்கவும், தேசிய இயக்கத்தின் தடத்தை மாற்றவும் சாதகமாகத் தங்கள அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். இந்த யோசனைகளைப் பல காங்கிரஸ்காரர்கள் எதிர்த்தனர். மகாத்மா காந்தி சிறையில் இருக்கையின் அவர் திட்டத்தை மாற்றுவது 'துரோகம்' என்றும் கூறினர். 1922ம் ஆண்டு கூடிய காங்கிரஸை இம்மாதிரி பிரச்னைகள் எதிர்நோக்கி நின்றன.

ஆவேசமும், ஆத்திரமும் உச்சநிலை யடைந்திருந்தன. பரந்த மணல் பரப்பில் இரவு பகலாகப் பல சிறிய கூட்டங்களும் பெரும் கூட்டங்களும் நடந்த வண்ணம் இருந்தன. பண்டித சுந்திரலால், ஸர்தார் வல்லபாய் படேல், சேத் ஜமுனுலால் பஜாஜ் முதலியோர் அடிக்கடி இந்தக் கூட்டங்களில் பேசினர். சட்ட மறுப்பை எதிர்த்தவர்களை அவர்கள் ஈவிரக்கமின்றித் தாக்கி வந்தனர். தனது தமையனுர் வித்தல்பாயை வல்லபாய் இலேசில் விடுவதாயில்லை. எல்லோரும் காந்திஜியிடம் நம்பிக்கை கொள்ளுமாறு சுந்தரலால் கூவி அழைத்தார்; அவர் பேசுகையில் உணர்ச்சி மேலிட்டால் அவர் தேகம் இப்படியும் அப்படியுமாய் அசைந்தாடிற்று. தமது மாகாணத்தில் காங்கிரஸ் கூடுமாறு அழைத்த ராஜன்பாபு நோய் வாய்ப்பட்டுத் தமது முகாமில் படுத்திருந்தார். மாறுதலை எதிர்ப்பவர்களிடம் அவர் அனுதாபம் கொண்டிருந்தார் என்று கூறத் தேவையில்லை. தேசபந்துதாஸ்தான் அந்த ஆண்டு காங்கிரஸ் தலைவர் முகாமில் ஏராளமான பிரதிநிதிகள் முன்பேசி, காங்கிரஸின் அடிப்படைத் தத்துவங்களுக்கு எதிராகத் தலைவர் சதி செய்வதுபற்றி ராஜன் பாபு சந்தோஷமடையவில்லை.

இங்குதான் முதன் முதலாக ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரைச சந்தித்தேன். புனித காந்தீயத்தை ஆதரித்தவர்களிடம்தான் நான் அனுதாபம் கொண்டிருந்தேன். ஆனல் தேசபந்துவும், பண்டித மோதிலாலும் காங்கிரஸை விட்டு வெளியேறும் நிலை ஏற்படுவதை நான் விரும்பவில்லை. எனது நண்பர் சிவாசொத்குப்தா பரிபூரண காந்தீயவாதி, அவர் எப்போதும் கொள்கைகளை மதிப்பவர். என்ன விளைவுகள்

ஏற்பட்டாலும் எப்போதும் கொள்கைகளைப் பிரகடனம் செய்வதொன்றே அவர் நோக்கம். ஒருநாள் மாலை நானும் இம்மாதிரி கூட்டம் ஒன்றில் கலந்து கொண்டேன் அந்தக் கூட்டத்தில் — மக்கள் அன்புடன் செல்வப் பெயர் அளித்த — ராஜாஜி பல நண்பர்களுடன் கலந்து ஆலோசித்தார். கூட்டம் நடந்த கூடாரத்தில் மக்கள் நெருக்கமாகக் கூடியிருந்தனர். போலி மதிப்பைக் கைவிட்டுப் பண்டித மோதிலாலும் தமது கருத்தைத் தெரிவிப்பதற்காக அங்கு வந்திருந்தார். ராஜாஜி எப்போதுமே மெலிந்த உடற் கட்டுள்ளவர். அவருக்கே உரித்தான பதட்டமற்ற நற்பண்புடன் சிறிய கூட்டங்களிலும் பெரிய கூட்டங்களிலும் பேசும் சிறப்புடையவர். கயா காங்கிரஸில் தலைவரையும் அவரது கட்சியையும் எதிர்த்தவர்களில் சிறந்தவர் ராஜாஜி. அச்சமயம் அவருக்கு வயது நாற்பதுதான். அவரைச் சந்தித்தவர்கள் யாவரும் அவரது புத்தி நுட்பத்தைக் கண்டு மயங்கியிருக்கின்றனர். பிறபல தலைவர்களெல்லாம் அவரை எதிர்காலத்தில் பெருமை கொண்டனர். அவரை எல்லோரும் 'சின்ன மகாத்மா' என்று அப்பொழுதே அழைக்கத் தொடங்கினர்.

பல்வேறு கட்சியினரும் கயா காங்கிரஸில் ஏராளமாகக் கூடியிருந்தனர். காங்கிரஸ் வழக்கத்துக்கு மேற்பட்ட நாட்கள் கூடியது கயாவில்தான் எனக் கூறலாம். ஒவ்வொரு நாளும் நீண்ட நேரம் சில சமயம் இரவு முழுவதும் விஷயாலோசனைக் கமிட்டி (அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டங்கள் தடைபெறும். விஷயாலோசனைக் கமிட்டி தனது தீர்மானங்களைத் திட்டம் செய்வதற்காகக் காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் ஒவ்வொரு நாளும் ஒத்திவைக்கப்படும். ஒன்றும் முடிவடையாமல் போகிறதே என்று தேசபந்து துடிதுடிப்பார்; ஆனால் விவாதம் என்னவோ முடிவடையாது. ராஜாஜி அநேகமாக மேடையில் நின்று கொண்டிருப்பதைக் காணலாம். அப்பாஸ் டயாப்ஜிதான் அவரை இடைவிடாது ஆதரித்து வருபவர்.

ஒரு சமயம் இரவு ஒரு மணி இருக்கும் ஒரு பிரதிநிதி பேசுவதற்கு எழுந்தார். மிகுந்த மனவேதனையுடன் அவரை நோக்கித் தேசபந்து, "தாராளமாகப் பேசுங்கள். இப்போது முன்னிரவுதானே?" என்று கூறினர். மற்றோர் சமயம் ராஜாஜி பேசிக்கொண்டிருக்கையில் ஒரு மூலையிலிருந்து ஒரு அங்கத்தினர். "தயவு செய்து முன்னே வாருங்கள்: நீங்கள் பேசுவது கேட்கவில்லை" என்றார்.

"மதிப்புமிக்க தலைவருக்கு என் முதுகைக் காட்டிக்கொண்டு எப்படி நான் பேசமுடியும்?" என்று ராஜாஜி பதிலளித்தார். அவருடைய பிரசங்கத்தில் தலைவரை வன்மையாகக் கண்டித்தே பேசினர். ஆனால் தலைவருக்கு முதுகைக் காட்டிக் கொண்டு அவரால் பேச முடியாது. ஏனெனில் அது நற் பண்புக்கு மாறானது: கடைசியில் ராஜாஜியே வெற்றி பெற்றார். அவர் வெற்றி பெறுவார் என்பது முன் கூட்டியே தெரிந்த விஷயம்தான். காங்கிரஸ் சபை இறுதிக் கூட்டத்தில் அங்கு கூடியிருந்த ஏராளமான பிரதிநிதிகளைப்பார்த்துத் தேசபந்து "நீங்கள் நிறைவேற்றிய தீர்மானங்களுக்காக உங்களை நான் பாராட்ட முடியாது" எனக் கூறினர் அவர் தமது தலைமைப் பதவியையும் ராஜிநாமாச்செய்தார்.

எடுத்த காரியத்தை முடிக்கும் இணையற்ற ஆற்றல் படைத்த கர்மயோகி ராஜாஜி.

— நன்றி 'கல்கி'



# ராஜாஜி.

பிறந்தது: பகுதான்ய வருடம் கார்த்திகை மாதம் புனர்பூசம் (10—12—1878)
பிறந்த இடம்: தொரப்பள்ளி.
ஆரம்பக் கல்வி: ஒசூர்.

1889 - பங்களூரில் கல்வி.
1896 - சென்னையில் பி. ஏ. பட்டம்.
1897 – விவேகானந்தர் தரிசனம்.
1900 – பி. எல். பட்டம் (21 வயது).
விவாகம், ஒரு கொலை வழக்கில் வாதாடினுர்.
1906 – டிசம்பர் கல்கத்தா காங்கிரஸில் பிரவேசம்.
1906 – சென்னை உயர்நீதி மன்றத்தில் பதிவு செய்து கொண்டார்.
1909 - பாரதியார் புதுவையில் சந்திப்பு.
1911 – சேலம் நகரசபை தலைவர்.
1915 – மனைவி அலமேலு மங்கா காலமானுர்.
1918 – மது தீண்டாமை ஒழிப்பு இயக்கம், காஞ்சீபுரத்தில் சென்னை ராஜதானி மாநாடு, திலகர் கட்சி.
1919 – மதுரை ராஜத்து வேஷ வழக்கில் வாதாடினுர்.
1919 – காந்திஜி சந்திப்பு.
1921 – காங்கிரஸ் பொதுச் செயலாளர், யங் இந்தியா ஆசிரியர்.
1924-30 புதுப்பாளையம் திருச்செங்கோடு ஆசிரமம்.
1930 - ஏப்ரல் உப்புச் சத்தியாக்ரஹ சிறைவாசம்.
1932 - சட்ட மறுப்பு இயக்கம்.
1937 - சென்னை பிரதம மந்திரி.
1940 - தனிநபர் சத்யாக்ரஹ சிறைவாசம்.
1942-1945 – கருத்து மாறுபட்டு காங்கிரஸிலிருந்து விலகி தேச விடுதலைக்கும், தலைவர்களின் சிறைவாச விடுதலைக்குமாக எழுதது - கருத்துப் போராட்டம்.
1945 - மீண்டும் காங்கிரஸில் சேருதல்.
1946 – இடைக்கால மந்திரி சபையில் மந்திரி.
1946 - செப்டம்பர் வர்த்தக - தொழில் மந்திரி. நவம்பர் கல்வி - கலை மந்திரி.
1947 - வங்காள கவர்னர்.
1948 – ஜூன் கவர்னர் ஜெனரல்.
1950 - மத்திய மந்திரி சபையில் இலாகா இல்லாத மந்திரி பதவி.
பின்பு உள்நாட்டு மந்திரி.
1952 – சென்னையில் மீண்டும் முதல் மந்திரி.
1959 – சுதந்திரா கட்சி ஆரம்பித்தல்.
1962 - அமெரிக்கா யாத்திரை. கென்னடி சந்திப்பு - போப் ஆண்டவருடன் சம்பாஷணை.
1972 - டிசம்பர் 25 மறைவு.
கடைசி வார்த்தை "நான் சந்தோஷமாக இருக்கிறேன்."

# ராஜாஜி.

பிறந்தது: பகுதான்ய வருடம் கார்த்திகை மாதம் புனர்பூசம் (10—12—1878)

பிறந்த இடம்: தொரப்பள்ளி.

ஆரம்பக் கல்வி: ஒசூர்.

1889 - பங்களூரில் கல்வி.

1896 - சென்னையில் பி. ஏ. பட்டம்.

1897 - விவேகானந்தர் தரிசனம்.

1900 - பி. எல். பட்டம் (21 வயது).
விவாகம், ஒரு கொலை வழக்கில் வாதாடினர்.

1906 - டிசம்பர் கல்கத்தா காங்கிரஸில் பிரவேசம்

1906 - சென்னை உயர்நீதி மன்றத்தில் பதிவு செய்து கொண்டார்.

1909 - பாரதியார் புதுவையில் சந்திப்பு.

1911 - சேலம் நகரசபை தலைவர்.

1915 - மனைவி அலமேலு மங்கா காலமானர்.

1918 - மது தீண்டாமை ஒழிப்பு இயக்கம், காஞ்சிபுரத்தில் சென்னை ராஜதானி மாநாடு,
திலகர் கட்சி.

1919 - மதுரை ராஜத்து வேஷ வழக்கில் வாதாடினர்.

1919 - காந்திஜி சந்திப்பு.

1921 - காங்கிரஸ் பொதுச் செயலாளர், யங் இந்தியா ஆசிரியர்.

1924-30 புதுப்பாளையம் திருச்செங்கோடு ஆசிரமம்.

1930 - ஏப்ரல் உப்புச் சத்தியாக்ரஹ சிறைவாசம்.

1932 - சட்ட மறுப்பு இயக்கம்.

1937 - சென்னை பிரதம மந்திரி.

1940 - தனிநபர் சத்யாக்ரஹ சிறைவாசம்.

1942 - 1945 - கருத்து மாறுபட்டு காங்கிரஸிலிருந்து விலகி தேச விடுதலைக்கும், தலைவர்களின் சிறைவாச விடுதலைக்குமாக எழுதது - கருத்துப் போராட்டம்.

1945 - மீண்டும் காங்கிரஸில் சேருதல்.

1946 - இடைக்கால மந்திரி சபையில் மந்திரி.

1946 - செப்டம்பர் வர்த்தக - தொழில் மந்திரி. நவம்பர் கல்வி - கலை மந்திரி.

1947 - வங்காள கவர்னர்.

1948 - ஜுன் கவர்னர் ஜெனரல்.

1950 - மத்திய மந்திரி சபையில் இலாகா இல்லாத மந்திரி பதவி,
பின்பு உள்நாட்டு மந்திரி.

1952 - சென்னையில் மீண்டும் முதல் மந்திரி.

1959 - சுதந்திரா கட்சி ஆரம்பித்தல்.

1962 - அமெரிக்கா யாத்திரை. கென்னடி சந்திப்பு - போப் ஆண்டவருடன் சம்பாஷணை.

1972 - டிசம்பர் 25 மறைவு.
கடைசி வார்த்தை "நான் சந்தோஷமாக இருக்கிறேன்."



Dear Sir,

Natural Justice and principles of civilieation require that the people of a country should be consulted throuh their representatives and their consent obtained before pushing that country into a terrible war and all its tragic consequences. This has been entirely ignored in the case of India. The British Government have ordered India to be in the war without asking her legislature. Other parts of the British commonwealth were allowed the choice of remaining neutral, irrespective of the causes or the motives of the war.

In spite of this great wrong done to India, we proposed that we should atleast have a national government to enable us honorably and effectively to organise the nation for defence. Even this was rejected. The British government are unwilling to part with their unrestricted powers and opportunities for exploitaion of the resources of this country to help themselves not minding what happens to India or to her people.

The legislative assembly has after a full debate refused to vtoe for money for the war-But the taxes that were rejected by the assembly are being imposed by the fiat of the Viceroy. and besides, officials are let loose on a defenceless and demoralised people to make what are called voluntory collections.

It is wrong therefore to help the British war with men or money. I appeal to you not to surrender to coercion.

A copy of this letter has been sent to the authorities so that they may proceed against me if they desire.

Yours Sincerely

C. Rajagopalachar

2-12-40

(1940ல் தனி நபர் சத்யாக்கிரஹத்தின் போது எழுதியது)

# குருவியே கேட்டி

ராஜாஜி

''சூரியன் வந்து விட்டானே இல்லேயோ, நட்சத்திரங்கள் எல்லாம் பயந்து போய் எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கின்றன '' என்றாள் கமலி.

''இல்லே கமலி! சூரியனுடைய வெளிச்சத்தில் நட்சத்திரங்கள் நம் கண்ணுக்கு மறைந்து போச்சு'' என்றான் ராமு.

''அது தப்பு. எனக்கு அத்தை சொன்னதுதான் சரி'' என்றாள் கமலி.

''போ, போ! அத்தை உனக்குக் கதை சொன்னாள். வாத்தியார் எனக்குச்சொன்னது தான் நிஜம்'' என்றான் ராமன்.

''ஆனால் அத்தை பொய் சொன்னாளா?' என்றாள் கமலி.

''பொய் சொல்லவில்லே, கதை சொன்னாள்'' என்றான் ராமு.

''கதை என்றால் என்ன?'' என்றாள் கமலி.

''கதை என்றால் 'ஒரு ஊரிலே ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு ஒரு பெண்' என்றெல்லாம் சொல்லுகிறார்களே அது.''

''ஆனால் அதுவெல்லாம் பொய்யா?'' என்றாள் கமலி.

''இல்லே, கமலி! பொய் என்றால் மோசம். கதையில் மோசம் இல்லே, வேடிக்கை, கேட்பதற்கு நன்றாக இருக்கும்'' என்றான் ராமு.

''ஆனால் எனக்கு ஒரு கதை சொல்லு. பொய் சொல்லக்கூடாது, தெரியுமா?''

''ஒரு ஊரிலே ஒரு பெண் இருந்தாள். அவள் பெயர் கமலி'' என்று ஆரம்பித்தான்.

''பொய்! ஏமாற்றுகிறாய். உனக்குக் கதை சொல்லத்தெரியாது. நான் அத்தையிடம் போகிறேன்'' என்று கமலி ஓடிப்போகப்போனாள்.

''இல்லே, இல்லே, நிஜமான கதை சொல்லுகிறேன் நில்!'' என்றான் ராமு.

''ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு ஒரு மகன். அவன் குதிரைமேல் ஏறி ஊருக்குள் சென்றான். பக்கத்தில் ஒரு சேவகனும் போனான்.''

''அப்புறம்?''

''அங்கே ஒரு குப்பைத்தொட்டி. அதன்மேல் ஒரு குருவி''

''ஊம்''

''அந்தக் குருவி தலையில் ஒரு குல்லாய்''

''குருவிக்குக் குல்லாய் ஏது?'' என்றாள் கமலி.

''குப்பைத் தொட்டியில் ஒரு கிழிந்த துணி இருந்தது. அதைக்கொண்டு போய்ச் சின்னக்குல்லாய் தைத்துக்கொண்டது.''

''ஊம், அப்புறம்?''

''குருவியைப்பார்த்தான் ராஜகுமாரன், சிரித்தான்.''

''ஏன் சிரிக்கிறாய்''

''எனக்குண்டுகுல்லா
உனக்குண்டோ''?

என்று குருவி தன் தலையை ஆட்டிக்கொண்டு பாடிற்று.''

''அப்புறம்?''

''ராஜகுமாரனுக்குக் கோபம் வந்து விட்டது. 'பிடுங்கிக்கொள் அந்தக்குருவியின் குல்லாயை' என்றான். சேவகன் போய்க்குருவியின் குல்லாயைப் பிடுங்கிக்கொண்டு ராஜகுமாரனிடம் கொடுத்தான்.

''ஐயோ பாவம்!''

''தனக்கில்லை யென்றிவன்
குருவியின் குல்லாயைப்
பிடுங்கிக்கொண்டான்
சீ, சீ ராஜகுமாரா
உனக்கிது ஆகுமோ?''

என்றது குருவி.

''திருப்பிக்கொடுத்துவிடு'' என்றான் ராஜகுமாரன்.

சேவகன் குருவிக்கு அதன் குல்லாயைக்கொடுத்து விட்டான்.

''எனக்கல்லவோ பயந்தான்:
குல்லாயைக் கொடுத்து விட்டான்,
இவன் என்ன ராஜாவாம்?''

என்று சொல்லிக்கொண்டு குருவி பறந்துபோயிற்று.

''ராஜகுமாரனுக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. குதிரையை ஓட்டினான், குருவியைப் பிடிக்க. அது மேலே பறந்து போயிற்று.

''சேவகன் ஓடிப்போய்க் குதிரையைப் பிடித்துக்கொண்டான். இல்லாவிட்டால் ராஜகுமாரன் கீழே விழுந்துவிட்டிருப்பான்.''

''குருவியே கெட்டி!'' என்றாள் கமலி.

''இந்த ராஜகுமரரனை நீ கலியாணம் பண்ணிக்கொள்வாயா?'' என்றான் ராமு.

''மாட்டேன்!'' என்றாள் கமலி.

படுத்தி அங்கே அமரச் செய்துவிட்டு, தாம் காரின் பின்புறமாகச் சுற்றி வந்து. கதவைத் திறந்து, இடது ஓரத்தில் உட்கார்ந்து கொண்டார்கள். கார் 'கல்கி' அலுவலகத் துக்குச் சென்றது. அங்கே சுமார் 50 பேருக்கு அன்று விருந்து. ஒரு மேஜை யைச் சுற்றி நான்கு நாற்காலிகள் போட்டு நால்வர் அமர்ந்து உண்பதற்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். மற்றவர்கள் எல்லோரும் தரையில் விரித்திருந்த பாயில் உட்கார்ந்து சாப்பிட வேண்டியது. ராஜாஜி, சதாசிவம் காதில் ஏதோ ரகசியமாகச் சொன்னார்கள், உடனே, சதாசிவம் ராஜாஜி, நவரத்னராம ராவ், மானிக்காபெல்டன் (Monica Felton) என்ற ஒரு ஆங்கிலப் பெண், நான் ஆகிய நால்வரையும் அந்த நாற்காலியில் அமரும் படி செய்தார். என்னை ராஜாஜி அறிமுகப் படுத்தியும் பராமுகமாக இருந்தாரே, அந்தப் பெரியவர்தான் அன்று நியாயமாக நாற்காலி யில் உட்கார்ந்து சாப்பிட வேண்டியவர். ஆனால், அவரைக் கீழேயே உட்கார்த்தி வைத்துவிட்டார்கள். என்னை மதிக்க வேண் டும் என்ற எண்ணத்தைக் காட்டிலும் என்னை அவமதித்தவருக்குப் பாடம் கற்பிக்க வேண் டும் என்ற எண்ணமே ராஜாஜியின் உள்ளத் தில் மேலோங்கி நின்றது. இப்படியெல்லாம் டி. கே. சி. யின் நினைவுக்கு அஞ்சலி செலுத் தினார்கள் ராஜாஜி.

ராஜாஜியின் அறிவு எப்போதும் விழிப்பு நிலையிலிருக்கும்; அதோடு, மின்னல்வெட் டும் வேகத்தில் அது இயங்கும். 1959ல் உள்நாட்டுத்துறை அமைச்சராக இருந்த திரு. பக்தவத்ஸலம் அவர்கள் சென்னை கம்பன் கழகத்தில் நிரந்தரத் தலைவராக இருந் தார்கள். அவர்கள் அனுப்பிய அழைப்பின் பேரில் இரண்டு நாள் கம்பன் விழாவுக்குத் தலைமை தாங்குவதற்காக நான் சென்னைக்கு வந்திருந்தேன். விழா ராஜாஜி ஹாலில் நடந்தது. கூட்டம் ஹால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. 2-வது நாள் விழாவில் பேசிய ஒரு நல்லறிஞர் கும்பகர்ணனுடைய குணாதிசயங்களைப் பற்றிப் புகழ்ந்து பேசி, கும்பகர்ணனையே தமிழர் சமுதாயத்துக்கு ஒரு லக்ஷிய வீரனாக ஏற்றுக்கொள்ள வேண் டும் என்று கூறினார். என்னுடைய முடி வுரையில் நான் சொன்னேன்:— ''கும்பகர் ணனை மெச்சத்தக்க பாத்திரமாகக் கம்பர் படைத்துவிட்டார், உண்மைதான். ஆனால், அவனைக் காட்டிலும் போற்றத்தக்க பாத்திர மாக விபீஷணனைப் படைத்திருக்கிறார். லக்ஷியம் என்று எடுத்துக்கொண்டால் விபீ ஷணனைப் படைத்திருக்கிறார். லக்ஷியம் என்று எடுத்துக் கொண்டால் விபீஷணனே கும்பகர்ணனைக் காட்டிலும் ஓங்கி உயர்ந்து நிற்கிறான். அறத்துக்கு ஏதாவது ஆபத்து வந்தால் அதைப் பாதுகாப்பதற்காக எதை யும் தியாகம் செய்ய முடிந்தது அவனால், தன் அண்ணன், தம்பி, குடும்பம், ஏன், தன் இனத்தையே தியாகம் செய்தான். நம் முடைய குற்றங்குறைகள், ஆசாபாசாங்கள் எல்லாம் கும்பகர்ணனிடத்திலிருப்பதால், அவனிடத்தில் நமக்குப் பரிவு ஏற்படுகிறது. விபீஷணனோ நமக்கு எட்டாத உயரத்தில் இருக்கிறான். ஆகையால் அவனிடத்தில் நமக்குக் கோபமே உண்டாகிறது, இருந் தாலும் தமிழ் சமுதாயத்துக்கு லக்ஷிய வீர னாக ஒருவனை நாம் ஏற்றுக்கொள்வதாயிருந் தால், அது கும்பகர்ணனாக இருக்கக்கூடாது, விபீஷணனாகவே இருக்க வேண்டும்'' இவ் வாறு நான் பேசிக்கொண்டிருந்தபோதே கும்பகர்ணனைப் போற்றிப் பேசிய அறிஞர், என் பேச்சிலே குறுக்கிட்டு, நீங்கள் சொல்லு வது தவறு. இதைப் பற்றி விவாதம் நடத்த வேண்டும் என்று உங்களுக்குச் சவால் விடு கிறேன்'' என்று முழங்கினார். அவர் சவாலை ஏற்று எனக்குத் தெரிந்த பதிலைச் சொன் னேன். இந்த நிகழ்ச்சியால் கூட்டத்தில் பெருத்த பரபரப்பு உண்டாயிற்று. அடுத்த நாள் காலையில் 'தினச்செய்தி' என்ற பத்தி ரிகையில் இந்தக் கூட்டத்தில் நடந்ததைக் கொட்டையெழுத்தில் வெளியிட்டிருந்தார் கள்.

காமராஜர் முதலமைச்சராக இருந்த காலம் அது; ராஜாஜி, காமராஜரையும் காங் கிரசையும் கடுமையாக எதிர்த்துக்கொண்டி ருந்த காலம். விழாவுக்கு அடுத்த நாள்

முற்பகல் 11 மணிக்கு நானும் சோமுவும் ராஜாஜியைச் சந்திக்கச் சென்றிருந்தோம். விழாவில் நடந்த சர்ச்சையைப்பற்றி ராஜாஜி குறிப்பிட்டுவிட்டு, சோமுவைப் பார்த்து, ''கும்பகர்ணனுக்குப் பரிந்து பேசினரே, அவர் என்ன வேலே பார்க்கிருர்?'' என்று கேட்டார்கள். சோமு, ''தமிழக அரசாங்கத் திலே உயர்ந்த வேலேயில் இருக்கிருர் அவர்'' என்று சொன்னதும்,ராஜாஜி ''ஓ! அப்படியா? ராவண தர்பாரிலேயே அவர் வேலே பார்க் கிருரா?'' என்று கொஞ்சம் ஆங்காரம் கலந்த சிரிப்போடு கேட்டார்கள். இப்படியாக அவர்களுடைய பயங்கர அறிவு மண்ணுக்கும் விண்ணுக்கும் மின்னல் பாய்ச்சலில் பாய்ந்து கொண்டேயிருக்கும்.

ரஸிகமணி மறைந்து 13 ஆண்டுகளுக் குப் பின்னுல், ராஜாஜி 10—9—67 'கல்கி' மலரில் ''பூரண ஹரியும் பூரண ரசிகமணியும்'' என்ற தலேப்பில் ஒரு கட்டுரை எழுதியிருந் தார்கள். ராமாவதாரம் பூரண அவதாரம் இல்லேயென்றும், கிருஷ்ணுவதாரமே பூரண அவதாரம் என்றும் அக்கட்டுரை விளக்கு கிறது. அவ்வாறு விளக்கிவிட்டு டி.கே சி.யை யும் கண்ணனேயும் ஒரே பீடத்தில் அமர்த்தி வைக்கிறது அக்கட்டுரை. கட்டுரையின் தொடக்க வாசகம் இது:— ''சென்ற திங் கட்கிழமை கண்ணன் பிறந்த நாள். அந்தத் திங்கட்கிழமையே தமிழ்க்கவிதை தரும் மகிழ்ச்சியின் ரகசியம், தமிழ் வசன நடை முன்னேற்றத்தின் ரகசியம், தாளமும் ராகமும் சேர்ந்த நல்லிசையின் ரகசியம், அன்பின் பரம மகிழ்ச்சி. வேஷங்களின் பொய்ம்மை, அனேத்தும் நன்ருகக் கண்ட பூரண ரசிகமணி டி. கே. சி. பிறந்த நாளும்.''

ராஜாஜி தம் கட்டுரையில் கண்ணபக வான் ரோகிணி நக்ஷத்திரத்தில் அவதரித் தான் என்றும் ரோகிணி நட்சத்திரக்கூட்டம் வண்டியைப் போல் இருப்பதாலும், வண்டி யின் முக்கிய பாகம் அச்சுமரமாகையாலும், கண்ணனே ''அதோக்ஷஜ!'' அல்லது அச்சு மரத்தடியில் அவதரித்தவன் என்று சொல்லு வதுண்டென்றும் கூறிவிட்டு, கட்டுரையைக் கீழ்க்கண்டபடி முடிக்கிருர்கள்;— ''இந்த அச்சுமரத்தடியில் மற்ருெருவர் அவதரித்தார். தமிழ்க் கவிக் காதலர் டி. கே. சி. என்று பெயரைப் பெற்ற மகான் சிதம்பரநாத முதலியார் அவர்கள். இவர்தான் 'கல்கி' கூட்டத்தின் குலபதியாக இருந்து பல் லாண்டு அந்தப் பத்திரிகையையும் அதை நடத்தியவர்களேயும் அதைப் படிப்பவர்களே யும் ஆசீர்வதித்து வந்தார். அவரைக் 'கல்கி' மறக்க முடியுமா? ஸ்ரீஜயந்தி என்ருல் கண்ணன் பிறந்த நாள், டி. கே. சி. பிறந்த நாள்,என்றும் தமிழர் கொண்டாட வேண்டிய நாள்.''

கண்ணனேடு டி. கே. சி.யை இணேத்து எழுதிய பரமபாகவதரான ராஜாஜியின் துணிச்சலேப் பாராட்டி, ''தாங்கள் பல்லாண்டு வாழ வேண்டும்'' என்று வாழ்த்தி நான் ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அதற்குப் பதி லாக ராஜாஜியிடமிருந்து வந்த கடிதம் இதோ;— ''தங்களுடைய கடிதம் படித்து, அமிர்தம் குடித்த தேவர்கள் போல், மத்தம் ஏறி, என்ன எழுதுவதென்று தெரியாமல் திகைக்கிறேன். மகராஜனுக்கும் பல்லாண்டு.

— இராசகோபாலாச்சாரி.

இந்தக் கடிதத்தில் ஒரு பிற் குறிப்பும் இருந்தது:—''தங்கள் கடிதத்தை சோமுவும் பார்த்து ஆனந்தம் பொங்கி மகிழ்ந்தார்''.

இவ்வாறெல்லாம் எழுதியருளிய ராஜா ஜியும், டி. கே சி. யைப் போல, அமரத்துவம் அடைந்து விட்டார்கள்; ஆனந்தத்தோடு அறிவு கலந்துவிட்டது. சௌந்தரியத்தோடு சத்தியம் கலந்தது போல. ராஜாஜி நூற் ருண்டு விழாவில் இந்த இனிய உணர்வு நமது இதயத்தைப் புனிதப்படுத்துமாக,



# யுக புருஷர்

திருக்குற்ருலத்தில் ஒரு நாள்.

''ராமர் ராமாநுஜர் ராஜாஜி'' என்ருர் நண்பர்.

''பேஷ் பேஷ் நல்ல ஒற்றுமை கண்டீர்கள். என்ருர் பேராசிரியர் கல்கி. ''சொல்லுங்கள்'' என்று மேலும் ஊக்குவித்தார்.

ராமன் தேரில் வந்தான். பலரும் மகிழ்ந் தார்கள். போற்றினர்கள். 'தேவர் பகை உள்ளன இவ்வள்ளல் தெறும் என்பார்' அப்படிச் சொன்னவர்கள் பார்த்திருக்க ராமன் சடைகள் தாங்கி முனிவரோடு வாழப்போனன்.

ராமாநுஜரோ சோழனுடைய உபத்திர வத்தை ஒதுக்க நினைத்து, நீலகிரிச் சாரலில் வேடர்களுடைய உதவியும் தேனும் தினைமாவும் தின்று மைசூர் சென்ருர்.

அதுபோல ராஜாஜியும் காங்கிரஸையும், நண்பர்கள் கூட்டத்தையும் விட்டு விட்டலபுரம், திருக்குற்ருலம் என்று இருக்கிருர் என்று சொன்னர் நண்பர்.

''நல்ல ஒற்றுமை அவர்கள் மாதிரி ராஜாஜி யும் அரியாசனத்தில் அமர்ந்து ஆட்சி நடத்து வார்கள் என்கிறீர்'' என்ருர் பேராசிரியர் கல்கி. இது நடந்தது 1936 வருஷம் பெப்ருவரி. சில நாட்களாக பழகிக்கொண்ட நண்பருக்கும் பேராசிரியருக்கும் நடந்த பேச்சு இன்பம், இவை.

*1935ல்* திருச்சியில் தேர்தல். திருச்சி T. S. S. ராஜன் புடம் போட்ட தேசபக்தர். அப்பொழுது திருச்சி நகரசபை தேர்தல் நடை பெற்றது. அதில் காங்கிரஸ் கட்டளைக்கு ராஜன் மாறுபாடாக செயல்பட்டார்.

''சில சமயம் ஆத்மாவின் வாக்குக்குக் கீழ் படிய, அதைக்காப்பாற்ற - கட்டுப்பாடு சட்டம் முதலியவைகளை தகர்த்தெறியவும் வேண்டியது தான்'' என்பது ராஜனுடைய வாதம். இதை ராஜாஜி ஒப்புக்கொள்ளவில்லை. 'பொது வாழ் விலிருந்து விலகுகிறேன்' என்று அத்தனையை யும் விட்டு விட்டார். அவர் ராஷ்டிரபதியாக (காங்கிரஸ் தலைவருக்கு அப்பொழுது உள்ள பெயர்) தேர்ந்தெடுக்கப்படுவது உறுதியாயி ருந்தது. விலகக்கூடாது என்று தேசம் சொல் லியது காங்கிரஸ் சொல்லிற்று. காரிய கமிட்டி யார் சொன்னர்கள், மஹாத்மாஜி சொன்னர். கேட்கவில்லை ராஜாஜி. தேசத்தின் வேண்டுதலை மறுத்து ஏகாந்தமான வாசம் வேண்டும் என்று தென்திசை நோக்கி வந்து விட்டார்கள். டி கே சி-யின் உறவு கிடைத்தது. இலக்கிய ரசனை யிலும் உபநிஷத் ஆராய்ச்சிலும் ஈடுபட்டு அமைதி அடைந்தார்கள். பற்றற்ற வாழ்க் கையை விரும்பி வாழ்வது ராஜாஜிக்கு கைவந்த கலை.

*'மாசற்ற கொள்கை மனத் தமைந்தக்கால்*

*ஈசனைக் காட்டும் உடம்பு'*

என்பார்களே அதை ராஜாஜியிடம் காணலாம். லக்ஷ்யமும் மனிதனும் முரண்பட்டதல்ல என்று காட்டுவதற்கே வால்மீகி முனிவர் இராமா யணத்தைத் தந்தார். சத்தியமும் தர்மமும் உலகத்தை நின்று நடத்தாவிடில் உலகம் என்ன வாகும் என்பதை முனிவர்கள் நன்கு உணர்ந் தார்கள். அதனலேயே எண்ணற்ற காவியங் களையும் கவிதைகளையும் யாத்துத் தந்தார்கள். அதிலே குறிப்பிடத் தக்கது மூன்று. உபநிஷத்- கீதை - பிரம்ம சூத்ரம். இம்மூன்றையும் இன் றைய உலகத்துக்கு பழகு தமிழில் தர ராஜாஜி உறுதி கொண்டார். 'தெள்ளுற்ற தமிழ் அமு தின் சுவை கண்டார் இங்கமரர் சிறப்புக் கண்

டார்' என்றது ராஜாஜியின் எழுத்துக்களுக்கு மிக பொருந்தும்.

உணர்ச்சி வசப்படாது புத்தியின் சமத்காரத்தை அதிகம் விரும்பும் படித்த மத்யவர்க்கத்துக்கு ராஜாஜி உகந்த தலைவர். ஒரு தலைவருக்கு இருக்க வேண்டிய அறிவை விட அதிக அளவு அறிவு அவரிடம் இருந்தது.

விஞ்ஞான சாலையில் பரிசீலனை செய்யும் விஞ்ஞானியைப் போல் அவர் ஒவ்வொரு விஷயத்தையும் நன்கு பரிசீலித்துப் பார்த்து பிறகு அதற்கு தக்கபடி செய்வார். இந்த வேலையில் அவர் மூளை களைப்பு அடைவதே இல்லை. ஒவ்வொரு அறிவுப் போரும் அவரிடம் ஒரு புதுமையைக் காட்டும். தர்க்கவாதியின் சிறப்பு அம்சம் அவரிடம் பூர்ணமாயிருந்தது. தர்க்கிப்பதையே அவர் விரும்பினர். அதில் மிகவும் ரசனையுடன் ஈடுபடுவார். இயற்கையிலே மிகப் பெரிய யதார்த்த வாதியாக அவர் வாழ்ந்தார்.

உணர்ச்சியும் சுயநலனும் பிரதானமாக நிலவும் அரசியல் சந்தையில், தன் ஒழுக்கத்தாலும் மேதையாலும் ராஜாஜி தனக்கென்று ஒரு உன்னத இடத்தை பிடித்துக் கொண்டார். சட்ட ஞானம் என்ற சாலையில் தீட்டப்பட்டுள்ள அவர் மூளை, மிகவும் கூர்மையாகி, வாழ்க்கை முழுவதையுமே சரிப்படுத்தி - செலுத்தி - கட்டுப்படுத்தி வந்திருக்கிறது. அவரை அஜாக்கிரதையாயிருக்க காண முடியாது. தம் கட்சிக்கு பலம் தேட முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கவும் பார்க்க முடியாது அவரிடம் தர்க்க சக்திக்கு குறையேயில்லை. ஒரு சாத்வீக மனிதரிடம் இவ்வறிவு இலேசாக கிளம்பி பரவி முழுவதும் ஆட்கொண்டுவிட்டது. இவ்வறிவு ராஜதந்திரம் - போர் தந்திரம் என்ற ரூபங்களை கொண்டு, பார்ப்பதற்கு எளிமையாகவும் சரளமாகவும் தோன்றும் அவரை காந்தீயத்தின் அட்வகேட்டாக செய்து விட்டது.

காந்தீயம் விருப்பு வெறுப்பற்ற ஆத்மாவுடன் செல்லுகிறது. அதில் ராஜ தந்திரம் இல்லை. அது எதிரியை தோற்கடிக்க வேண்டும் என்று ஆர்வம் கொள்வதில்லை. அதில் அதற்கு சுகமும் இல்லை. சதுரங்கத்தின் ஆள் மாருட்டம் இல்லை. காந்தீயம் எதிரியின் துக்கத்தில் துக்கமும் மகிழ்ச்சியில் மகிழ்ச்சியும் கொள்ளுகிறது. அதில் நீதி உண்டு. ராஜமார்க்கம் போன்ற நேர்வழி உண்டு. ராஜாஜி - காந்திஜியின் வலதுகையாக இருந்தும் - ஒரு மிகப் பெரிய யுத்த தந்திரி. காந்தீயத்தின் ஆத்மா ராஜாஜியிடம் மிகக் குறைவாகவே உள்ளது. ''ஒத்துழையாமை என்பது அரசியல் லட்சியம் ஒன்றை அடைவதற்காக ஏற்படுத்தப்பட்ட சாதனம் மட்டும் அன்று. வாழ்க்கையை எவ்விதம்நடத்த வேண்டும் என்னும் வழியைக் காட்டுவதே அது. அநியாயத்துடன் ஒத்துழையாமலிருப்பது அவசியம் செய்துதீர வேண்டிய கடமை'' என்பார் ராஜாஜி. அப்படியே வாழ்ந்தும் காட்டினர்.

ராஜாஜியை பலர் ஏசவும், அவர் செய்த காரியங்களை முன்மாதிரியாகச் சொல்லி மக்கள் கோபத்தை அவர்மேல் திருப்பி விடவும் கண்டிருக்கலாம். அப்பொழுதெல்லாம் ஒரு கதை எண்ணத்தகும்.

'ஒருவனுக்குக் காலில் சொரிசிரங்கு கிளம்பியது. அவன் பெரும் செல்வம் படைத்தவன் அதைக்கண்ட வைத்யன் நாலு நாழிகை பொடு தலையை வைத்துக்கட்டினல் குணமாய்விடும்' என்றான். பொடுதலைக்காரன் ஒருவனை தேடிப் பிடித்து பணக்காரனுயுள்ள நோயாளி தன் காலிலே நாலு நாழிகை கட்டி வைத்து பின்னர் விடுவித்தான்.

'ஏன் ஐயா இப்படி' என்று கேட்டான், பொடுதலைக்காரன்.

'வைத்தியன் சொன்ன மருந்து' இது என்றான், அவன்

பொடுதலைக்காரன் வைத்தியனிடம் சென்று 'என் தலையை இடித்துகட்ட வேண்டும்' என்று சொல்லாமல் விட்டீரே' என்று சொன்னான். வைத்தியன் சிரித்தான். பொடுதலை என்று ஒரு பச்சிலை. பொடு என்று தலையில் வரும் ஒரு நோய்க்கும் பெயர். வைத்தியன் சொன்னதை மாறுபாடாக பொருள் கண்ட பணக்காரன் செய்த காரியம் இது. இதை உள்ளடக்கி குரங்கு ரத்தினத்தை பொடி செய்யாமல் நக்கி மோந்து பார்த்து விட்டெறிந்த தாக ஒரு வடமொழி கவியும் உண்டு.

கவி வருமாறு:

ஆக்ராதம் பரிசும்பிதம் பரிமுஹுர்
லீடம் புநச்சர் விதம்
த்யக்தம் வாபுவி நீரஸேந மநஸா
தத்ரவ்யதாம் மாக்ருதா:|

ஹேஸத் ரத்ந தவைத தேவ குசலம்
யத்வாந ரேணு தராத்
அந்தஸ்ஸார விலோகந வ்யஸநிநா
தூர்ணீக்ருதம் நாச்மநா:||

''ராஜாஜியை முழுவதும் அளந்துவிட முடியாது என்பதற்கு இது உதாரணமாகும் பௌதிக சாஸ்திர விஷயங்களுக்கும் கணித சாஸ்திரங்களுக்கும் வரம்பு உண்டு. அதை மீறினுல் ஒத்துவராது. பரம்பொருள் ஆராய்ச்சி அப்படி அன்று மனிதனுடைய புத்தி ஆராய்ச்சிக்குள் பரம்பொருள் தத்துவம் அடங்கிநிற்காது காரணங்களுக்கெல்லாம் காரணமான முழு முதற்காரணம் - பரம்பொருள் தத்வம் - அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்டது. அதற்கு வரம்பு இல்லாத பணிவு வேண்டும். இதை கீதை சொல்லுகிறது.

'இந்திரியாணும்ஹி' என்று ஆரம்பமுள்ள ஸ்லோகம் அது. ராஜாஜியை விருப்புவெறுப்பு இல்லாமல் ஆராய்ச்சி செய்து பார்த்தால் இந்தயுகத்தில் தோன்றிய ஒரு அற்புதமனிதரின் வரலாறு கிடைக்கும்.

— V. S. வேங்கடாச்சாரி

# மஹாத்மா காந்தி என்ன உபதேசித்தார்.

காந்தியைப் புகழ்ந்து பேசுவது போதாது. உயிருடனிருந்த போதும் அவர் புகழ்ச்சிப் பேச்சை விரும்பவில்லை. உடலை நீத்த ஆன்மாவா வெறும் வாய்ப் புகழ்ச்சியைக் கேட்டுச் சந்தோஷமடையும்? அவர் சொல்லி வந்தபடி பாரத மக்கள் நடந்தோமானுல் அவர் ஆன்மா திருப்தியடையும். ஜாதிமத வேற்றுமைகளைப் பொருட்படுத்தாமல் அன்பு செலுத்துவது எப்படி, முடியுமா? என்று சந்தேகப் படலாம். முடியும் என்று அவர் எண்ணற்ற தடவை சொல்லியிருக்கிருர். பாரத நாடு சுதந்திரம் பெறும் என்று அவர் சொன்னபோது மக்கள் நம்பவில்லை. பிறகு தம் கண்ணுலேயே கண்டார்கள், நம்பாதவர்கள். அவர் சொன்னது போல் பாரதம் யுத்தமின்றிச் சுயராஜ்யம் பெற்று விட்டது. அதைப் போலவே துவேஷம் வேண்டாம், அன்பே வெல்லும் என்று அவர் சொன்னதும் உண்மை. அவர் சொன்னபடி செய்து பார்த்தோமானுல் உண்மையைக் காண்போம். ஜாதிமத வேற்றுமைக்காக வெறுப்பைக் கொள்வது மஹாத்மாவின் உபதேசத்துக்கும் விருப்பத்துக்கும் மாருகும். அவர் சொன்னபடி அன்பு வழியைப் பயிற்சி செய்வோமாக.

— ராஜாஜி 1956 ஆகஸ்ட்
நன்றி ''கல்கி''

# ராஜாஜியின் பண்பாடு

மீ. ப. சோமசுந்தரம் (சோமு)

இந்தப் பண்பாடு என்ற தமிழ்ச்சொல் தமிழில் வழங்க ஆரம்பித்ததே சுமார்நாற்பது ஆண்டுகளுக்கு முன்புதான். பண்படுதல் என்ற வழக்கு, தமிழில் இருந்தபோதிலும், பண்பாடு என்ற (Noun) பெயர்ச்சொல் புதிதாக வழங்கத் தொடங்கிய சொல்லே யாகும். இந்தச் சொல்லாட்சி ஆரம்பித்த தற்கும் ராஜாஜிக்கும் ஒரு தொடர்பு உண்டு.

1937-இல் சில நண்பர்கள் (Gulture) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நேராகதமிழ்ச் சொல் என்ன என்று தீவிரமாக ஆராய்ந் தார்கள். கலாச்சாரம் என்று சொன்னதை விட வேறு பொருத்தமான ஒருசொல் வேண டும் என்று இந்த நண்பர்கள் விரும்பினர்கள். ராஜாஜியும் இந்தச் சொல்லைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். முடிவில் (Culture) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஒரு நல்ல தமிழ்ச் சொல் புதிதாக ஆக்கித் தரவேண்டும் என்று டி. கே. சியிடம் இந்த நண்பர்கள் சொன்ஞர்கள் அதன்வினேவே 'பண்பாடு' என்ற புதிய சொல்.

ராஜாஜி அடிக்கடி சொல்லுவார் – பண் படு என்ற (Verb) இலிருந்து பண்பாடு என்ற (Noun)ஐ எத்தனே அழகாக, எத்தனே எளி தாகத் தமிழ் மொழிக்குக் கொடுத்துவிட்டார் டி. கே. சி. என்று. பண்படு என்று வினே மொழியாகச் சொல்வதையே பண்பாடு என்ற விஷயத்தில் ஒரு பெயர்ச் சொல்லாகத் தரும் போது, நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழில் வழங்கி வருகிற ஒரு பழைய சொல் லைப் போலவே தமக்கு ஒலிக்கிறது அது. புதிதாகச் சொல் ஆக்கம் செய்கிறவர்கள் எப்போதும் கடைப்பிடிக்க வேண்டிய ஒரு மரபு இதுதான். அப்படிச் செய்துவிட்டால் அந்தச் சொல் மொழியோடு நன்கு கலந்து விடும் என்று அடிக்கடி வற்புறுத்துவார் ராஜாஜி.

பண்பாடு என்ற சொல்லுக்கும் ராஜா ஜிக்கும் இப்படி ஒரு தொடர்பு இதுபோலவே நாகரிகம் என்ற வார்த்தையையும் ராஜாஜி அடிக்கடி உபயோகப்படுத்துவார். நகரம் என்ற சொல்லில் இருந்து உண்டாவதே நாகரிகம் என்ற சொல். பண்பாடு என்பது உள்ளத்தில் அறிவும் உணர்ச்சிகளும் பண பட்டுப் பண்பட்டு ஏற்படுகிற ஒரு பண்பு. நாகரிகம் என்பது நகரப் பாங்கிலே தோய்ந்து தோய்ந்து பழக்க வழக்கங்களிலே ஏற்படு கிற பண்பு. இந்த இரண்டு சொற்களும் ராஜாஜிக்குப் பிடித்த சொற்களாக இருந்தது போலவே. இந்த இரண்டு பண்புகளுமே அவருக்கு மிகவும் பிடித்த பண்புகளாக வாழ்வு முழுவதும் இருந்து வந்தன.

அவருடைய உணர்ச்சிகள், அறிவு மின் னல்கள் எதிலும், பண்பாட்டுக்கு இழுக்குத் தருகிற எதுவும் எப்போதும் வராது. அது போலவே அவருடைய பழக்க வழக்கங்களி லும் நாகரிகக் குறைவான எந்த மாசு மறுவும் இராது. சாதாரண சமுகத் தொண்டு நிலே யில் இருந்தபோதிலும் சரி. நமது தேசத்தின் கவர்னர் ஜெனரலாக இருந்தபோதிலும் சரி, நாகரிகம் பண்பாடு இரண்டுக்கும் ஒரு துளி அப்பழுக்குக்கூட ஏற்படாதவாறு அவருடைய நடை உடை சொல் செயல் எல்லாம் அமைந் திருந்தன. இது ஒரு மிகப்பெரிய சாதனே.

துயரமோ மகிழ்ச்சியோ இவற்றை அப்படியே வெளிப்படுத்துவது சிலர் பழக்கம். பெரிய பதவிகள் கிடைக்கும்போது நாகரிகம் பண்பாடு இவற்றுக்கு மாறாக ஆடம்பரம் படாடோபம் ஆகிய கோலங்களிலே மகிழ்ச்சியை அட்டகாசமாக வெளியிடுவதும், தாழ்வு வரும்போது (Valgar) என்று சொல்லுகிற அளவுக்குத் துயரத்தை வெளியே காட்டிப் பிரலாபிப்பதும் உயர்ந்த பண்பாடுள்ள இதயத்துக்கு ஒவ்வாது அல்லவா? ராஜாஜி தமது வாழ்வு முழுதும் இந்த அறநெறியைக் கடைப்பிடித்தார். இதய உணர்ச்சிகளை அப்படியே ஒப்பாரி வைப்பதற்கும், ஆழ்ந்த சோகத்தை ஒரு சாவேரி ராகத்தின் ஆரோகண அவரோகணச் சிரமத்துக்குள்ளே நின்று வீணையிலே அழுத்திக் காட்டுவதற்கும் எத்தனை வித்தியாசம் இருக்கிறது. இந்த வித்தியாசத்திலேதான் மனிதகுலத்தின் பண்பாடும், அதன் வளர்ச்சியும் துலங்குகின்றன. ராஜாஜியின் இதய உணர்ச்சிகள் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்ட ஒரு ராகத்தின் ஆரோகண அவரோகணம் போலவே, ஏற்ற இறக்க நியதிகளுக்கு உட்பட்டவை. இதுவே ராஜாஜியின் பண்பாடு.

ஒரு சமயம் அவருடைய வீட்டுக்கு வெளியே பலர் கூச்சல்போட்டு ஏதேதோ வசைமொழிகளைப் பொழிந்து கொண்டிருந்தார்கள். நான் உள்ளே நுழைந்தபோது ஊஞ்சலிலே இடது காதைப் பலகையிலே வைத்து ஒருச்சாய்ந்துப் படுத்துக்கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் மறுபக்கமாகப் புரண்டார்.

"இந்தக் காது கேட்காது அல்லவா, வெளியே கூச்சல் இருந்தால், கேட்காத காதைக் கீழே பலகையிலே புதைத்துக் கொண்டு படுத்துக்கொள்கிறேன் " என்றார்.

"உன்னோடு பேசவேண்டும் அல்லவா? அதனால் இப்போது திரும்பிப் படுத்துக் கொண்டேன். என்ன விஷயம் சொல்." என்று இடது காதைச் செவிசாய்த்துக் கேட்டார் ராஜாஜி.

இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், அவரைத்திட்டுகிறவர்கள் பிறகு அவரை வானளாவப் புகழ்ந்ததையும் நாம் எல்லோரும் பார்த்திருக்கிறோம் அல்லவா? புகழ்ச்சியும் இகழ்ச்சியும் காதிலே போட்டுக்கொள்கிற வழக்கத்தையே அவர் வைத்துக்கொள்ளவில்லை. உண்மையிலேயே காதுகேட்கும்படியாகத் திட்டியவர்களிடமும் அவர் பிற்காலத்தில் மிகுந்த நேசத்தோடு பழகியதை நான் பார்த்திருக்கிறேன்.

இதற்கு முக்கிய காரணம் அவருடைய பண்பாட்டில் ஒரு அடிப்படை இருந்தது. அதாவது, தேசத்தினுடைய நலனுக்காகப், பொதுமக்களுடைய வசதிக்காகத் தனது சொந்த விருப்பு வெறுப்புக்களைத் தள்ளி வைப்பது, நாட்டு நன்மைக்காகத் தன்னை வெறுப்பவர்களையும் விரும்பச்செய்து உறவு கொள்வது, பொது முன்னேற்றத்துக்காகத் தனது முன்னேற்றத்தை விட்டுக்கொடுப்பது - என்றெல்லாம் சில சித்தாந்தங்களை வாழ்விலே அவர் கடைப்பிடித்தார். இதனால் சில சமயங்களில் அவருடைய செயல்கள் சிலருக்கு வியப்பையும் அதிர்ச்சியையும் கூடத் தந்ததுண்டு. ஆனால், அவருடைய பண்பாடு, அவருடைய இதயப் பாங்கு இதை முரண்பாடாகவே கருதவில்லை,

பொதுவாழ்விலேதான் இவ்வாறு என்பதில்லை, சொந்த வாழ்விலும் அப்படித்தான். நண்பர்களிடமும் தன்னைச் சார்ந்தவர்களிடமும் ராஜாஜி இப்படியேதான் பழகுவார். ஒரு சமயம் எனக்காக என்னுடைய நன்மைக்காகத் தமது பரம வைரி என்று கருதக்கூடிய ஒரு பெரிய இடத்தை அணுக அவர் தயக்கமின்றி முன்வந்தார், வெற்றி தோல்வி வேறு விஷயம். பிறருடைய நன்மை என்று கருதிவிட்டால் அவர் தனது சொந்த கௌரவம், சம்பிரதாயம் எதையும் தூக்கி எறிந்து விடுவார். இப்படி ஒரு பண்பாடு அவருக்கு. இது ஒரு ஆன்ம சாதகரின் பண்பாடு. வெறும் படிப்பினால் மட்டும் வரக்கூடிய பண்பாடு அல்ல அது.

Thank you என்ற சொற்கள் அவருடைய வாழ்வின் தினசரிப் பழக்கத்தில் முக்கியமான இடம்பெற்ற சொற்கள். ஒரு சிறு சமாசாரம், அதற்கும் நன்றி சொல்லுவார். சில சமயங்களில் அந்த நன்றியை நினைவோடு வைத்திருந்து மிக அரிய முறையிலே செயலிலே காட்டுவார். இதெல்லாம் நெருங்கிப் பழகியவர்களுக்கு ஒரு பெரிய கல்வியாகவே இருக்கும்.

வயதில் தமக்கு எத்தனை சிறியவர்களையும் மரியாதையோடு நடத்துவார். யாரையும் அதட்ட மாட்டார். ஊழியர்களை வேலை வாங்குவது அவரிடமிருந்த அதிகாரம்அல்ல அவரிடமிருந்த ஒரு பெரிய கவின் கலை, அது பண்பாட்டிலிருந்து முளைத்த ஒரு மெல்லிய மலர்.

அவருடைய அறை, அவருடைய துணிமணிகள், அவர் பயன்படுத்திய பொருள்கள், கட்டில்கள், நாற்காலிகள், சாய்மானங்கள், சாப்பிடுகிற தட்டு, சாப்பிடும் முறை, தூய்மையான வெள்ளைக் கதரை உடம்பிலே சுற்றித் தட்டுக்கட்டியிருக்கும் நேர்த்தி, காரிலே இடது ஓரத்தில் உட்கார்ந்துகொள்ளும் ஒயில், முக்கிய விஷயங்களைச் செவிசாய்த்துக் கேட்கும் எழில்; சிரிப்பு குறும்பு, வேடிக்கை, தயை, கருணையோடு செய்யும் உதவி – இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம். எதிலும் ஒரு பண்பாடு, ஒரு நாகரிகம் துலங்கும்.

ராஜாஜியினுடைய கையெழுத்து, அவருடைய பேச்சு, கடிதங்கள் இவற்றின் வக்கணைகள், மனிதர்களை அவர் அழைக்கும் முறை, எத்தனை பெரிய கூட்டத்திலும் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு வகையான மொழியைச் சொல்லுகிற பாங்கு எல்லாவற்றிலும் அழகும் பண்பாடும் காணுவது என் பழக்கம். எனக்கு அவரிடத்தில் இருந்த எல்லையில்லாத ஈடுபாடு காரணமாக, அவர் செய்வது எல்லாம் பண்பாட்டினுடைய வெளியீடாகவே தோன்றுவது இயற்கை இயல்பு. என்னை விட்டுவிடுங்கள். இதுவரை அவருடைய எந்த அரசியல் எதிரியும், அவருடைய பண்பாட்டைப்பற்றிக் குறைகூறியதில்லை. அவரிடம் எத்தனை கோபம் கொண்டிருந்த எந்த மனிதரும் கொள்கையளவில், கட்சி அளவில், நடவடிக்கைகளைக் குறித்து மாறுபட்ட கருத்துக்களைக் கூறலாம். கூறியும் இருக்கிறார்கள் ஆனால் எவருமே ராஜாஜியின் எந்தச்செயலும் எந்தச் சொல்லும் பண்பாட்டுக்கு முரணாகவோ அல்லது இழுக்காகவோ இருந்ததாக இதுவரை எந்தக்காலத்திலும் சொன்னதில்லை. இது ஒன்றே அவருடைய பண்பாட்டுக்கு நிலையானசான்றாகும்.

---

## ராஜாஜியின் நன்றி

"உலகத்தில் தெய்வ பக்தி அதிகமானதினால் கடவுளுக்கு எவ்வளவு கஷ்டம் அதிகரிக்கக் கூடும் என்பதை இன்றைக்கு தெரிந்து கொண்டேன். கடவுளிடம் பக்தி செலுத்தாதவர்கள் கடவுளுக்குக் கஷ்டம் கொடுக்காமலிருக்கிறார்கள். உங்களுடைய அன்பினால் எனக்கு இப்போது ஏற்பட்ட கஷ்டத்திலிருந்து கடவுளுடைய கஷ்டங்களைப் பற்றியும் நினைக்கும்படி நேர்ந்தது. இந்தக் கூட்டத்தில் உள்ளவர்களில் எனக்கு மாலை போடாதவர்களுக்கெல்லாம் நன்றி செலுத்துகிறேன்."

*— 1952 ஜூனில் நடந்த நெல்லை காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் பேசியது.*

# ஓர் இலக்கியச் சந்திப்பு

சந்திரசூடன்

1971-ம் ஆண்டு ஜனவரி ... ... ... நாள் ராஜாஜியைச் சந்திக்க உருதுக் கவிஞர் திரு. ஃபருக்கி என்பவரும், நாவலாசிரியர் திரு. ர. சு. நல்லபெருமாளும் சென்றனர். அந்தச் சந்திப்புக்கு திரு. மீ. பா. சோமசுந்தரம் அவர்கள் (சோமு) ஏற்பாடு செய்திருந்தார்கள்.

திரு. சோமு அவர்கள், அவர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு ராஜாஜியின் வீட்டுக்குச் சென்ற போது மாலை மணி 3 இருக்கும்.

அப்போது அரசியல் சூழ்நிலையில் பரபரப்பு ஏற்பட்டிருந்த நேரம். இந்திரா காந்தியால் பாராளுமன்றம் கலைக்கப்பட்டு மீண்டும் தேர்தலுக்கான முஸ்தீபு நடைபெற்றுக் கொண்டிருந்த காலம் அது.

ராஜாஜி ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தார். அவரைச் சுற்றிலும் புத்தகங்களும், தாள்களும் பரவிக் கிடந்தன. அந்தத் தள்ளாத வயதிலும் அவருடைய அறிவும், சிந்தனையும் தளராத விந்தையை எண்ணியவாறே எல்லாரும் அவருக்கு முன்பு அமர்ந்தார்கள்.

திரு. சோமு முதலில் உருதுக் கவிஞரை ராஜாஜிக்கு அறிமுகப் படுத்தினர்.

"என்ன பெயர்!" ராஜாஜி கேட்டார்.

"ஃபருக்கி" என்று மீண்டும் சொன்னர் சோமு.

ராஜாஜி உருதுக் கவிஞரை உற்றுப் பார்த்தவாறே அந்தப் பெயரை இரண்டு மூன்று முறை மெதுவாக உச்சரித்தார். பிறகு கவிஞரைப் பார்த்து "என்ன ஸ்பெல்லிங்" என்று ஆங்கிலத்தில் கேட்டார். அவர்களுக்கிடையே நடைபெற்ற உரையாடல் ஆங்கில மொழியிலேயே நடைபெற்றது.

கவிஞர் தம்முடைய பெயரை எழுத்துக் கூட்டிச் சொன்னர்.

ராஜாஜி அதை நன்கு மனத்தில் வாங்கிக் கொண்டு மீண்டும் மெதுவாக உச்சரித்தார். பிறகு நாற்காலியில் நன்கு சாய்ந்து கொண்டு திரு ர. சு நல்லபெருமாளைப் பார்த்தார். உடனே திரு. சோமு அறிமுகப்படுத்தினர்.

"ஓ, கல்கிப் பத்திரிகையோடு தொடர்பு கொண்டவரா? அப்படியானல் தாமாகத் தான் எழுதுவார்" என்று கூறிப் புன்னகைத்தார். பிறகு "சரி முதலில் இவரை விசாரிப்போம்" என்று கூறி உருதுக் கவிஞரின் பக்கம் பார்வையைச் செலுத்தி "என்ன விஷயமாக வந்தீர்கள்? என்னல் என்ன ஆக வேண்டும்?" என்று கேட்டார்.

"உங்களை வெகுகாலமாகப் பார்க்க வேண்டும் என்று ஆசை" என்ரூர் ஃபருக்கி.

"வெகுகாலமென்ருல்?" - ராஜாஜி கேட்டார்.

"1947-ல் இருந்து"

"ஓ ... ...!" – ராஜாஜி வியப்புடன் அவரைப் பார்த்தார் "இருபத்து மூன்று வருஷங்கள்!" என்ரூர் பிறகு" ஏன் இதுவரை

சந்திக்கவில்லை? ஏதாவது அரசியல் கட்சியைச் சார்ந்தவரா?" என்று கேட்டார்.

''இல்லை டில்லி பல்கலைக் கழகத்தில் பேராசிரியராயிக்கிறேன். அப்போது இந்து முஸ்லிம் பிரச்னையால் பாதிக்கப்பட்டவன்'' என்றார் கவிஞர். பேசியபோது கவிஞர் உணர்ச்சி வசப்பட்டார். சொற்கள் தடைப் பட்டன. சற்று நேரம் மௌனம் நிலவியது. மௌனத்தை ராஜாஜி கலைத்தார்.

''என்னை அப்போது பார்க்க நினைத்ததற்கு என்ன காரணம்?'' என்று கேட்டார்.

''மகாத்மா காந்தி உங்களை சந்திக்கும்படி கூறினார். அப்போது நானும் என் குடும்பத்தாரும் பல சங்கடத்துக்குள்ளாகியிருந்தோம். நிவாரணம் தேடி மகாத்மாவைச் சந்தித்தேன். அவர் உங்களைச் சந்திக்கும்படி சொன்னார். ஆனால் எப்படியோ உங்களைச் சந்திக்க வாய்ப்பில்லாமலே போய் விட்டது''. — இந்தச்சமயத்தில் உருதுக் கவிஞரின் குரல் உணர்ச்சிப் பெருக்கால் சற்று கம்மியது. ''தெய்வாதீனமாக இப்போதுதான் வாய்ப்புக்கிட்டியது'' என்றார்.

ராஜாஜி அவரை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய உதட்டில் புன்னகை அரும்பியது.

''மகாத்மா காந்தி சொன்னது நாற்பத்தேழில். நீங்கள் வந்திருப்பது எழுபத்தொன்றில். இவ்வளவு காலத்துக்கிடையில் என்னுடைய உதவி இல்லாமலே தாங்கள் உயர்ந்த நிலையில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டீர்கள் சந்தோஷம். இப்போது என்னைப் பார்க்க வந்ததற்கு ஏதாவது காரணம் உண்டா?'' என்று ராஜாஜி கேட்டதும் கவிஞர், சற்றுத்திகைப்புடன் விழித்தார்.

''உருதுமொழி விஷயமாக உங்களிடம் பேசலாம் என்று''......''என்று இழுத்தார்.

''உருதுமொழிக்கு நான் என்ன செய்ய வேண்டும்''

''அரசாங்கத்திடமிருந்து அதற்கு தகுந்த ஆதரவில்லை. இந்தியாவில் அதற்குரிய இடத்தை இன்னும் அது பெற்றபாடில்லை''

இதைக் கேட்டுவிட்டு ராஜாஜி சற்று நேரம் மௌனமாயிருந்தார்.

''உருது மொழி இந்திய மொழிதான். இந்திய மண்ணில்தான் அது உருப்பெற்றது. அதற்குள்ள நியாயமான இடத்தை இங்கு அது பெற வேண்டியதுதான்'' என்றார். பிறகு, ''இதற்கான முயற்சி முன்பு ஒருமுறை நடைபெற்றது.'' என்று கூறிவிட்டு உருது மொழி இலக்கியகர்த்தாக்கள் சிலரைப்பற்றி விசாரித்தார். அவர் கவர்னர் ஜெனரலாக இருந்தபோது டில்லியில் பரிச்சியமானவர்கள் அவர்கள். அவர்களில் பலர் இறந்துவிட்ட செய்தியை உருதுக் கவிஞர் சொன்னதும் சில விநாடிகள் ராஜாஜி மௌனமாயிருந்தார்.

பழைய நினைவுகள் அவருடைய சிந்தனையில் படர்ந்தது நன்கு தெரிந்தது.

''உருது கம்பீரமான மொழி'' என்று கூறி விட்டு உருதுக் கவிதைகளின் நயம்பற்றிச் சொன்னார். பிறகு கேட்டார்.

''இப்போது நான் என்ன செய்யமுடியும்? நான் எந்தப் பதவியிலும் இல்லை. நான் சொல்வதைக் கேட்பாரும் இல்லை. அரசியல் எப்படியோ போய்க்கொண்டிருக்கிறது'

அப்போது ஃபருக்கி சொன்னார்:

''நீங்கள் இது விஷயத்தில் மனது வைத்தால் நல்லது''

தேர்தல் வருகிறது. உருது பேசும் உங்கள் மக்கள் சுதந்திராகட்சியை ஆதரித்து ஆட்சியில் அமரச் செய்தால் நான் இது விஷயத்தில் உறுதி கூற முடியும் உங்களால் முடியுமா? நீங்கள் டில்லியில் இதற்காகப் பாடுபட முடியுமா சொல்லுங்கள்? இப்போதே உறுதியளிக்கிறேன். சுதந்திராக் கட்சி செல்வாக்கு பெறும் அளவுக்கு பார்லிமெண்டில் இடம் பெறுமானால் உங்கள் உருது மொழிக்கு இந்தியாவில் உரிய இடம் கிடைக்கும்படி செய்கிறேன். (I promise you)'' என்றார் ராஜாஜி, அழுத்தமாக.

''நிச்சயம் நான்பாடுபடுவேன்'' என்ருர். ஃபருக்கி உணர்ச்சி பொங்க.

சற்று நேரம் உருதுமொழியின் வரலாறு பற்றியும் மொழியின் நயம்பற்றி ஃபருக்கி யுடன் அளவளாவினுர்கள் ராஜாஜி.

பின்னர் திரு நல்லபெருமாளேப் பார்த் தார் ''இந்த இளேஞரை விசாரிக்கலாமே'' என்ருர். ''இப்போது என்ன எழுதிக்கொண் டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார,

''கல்கியில் இப்போது இவருடைய தொடர்நாவல் வெளியாகிக் கொண்டிருக்கி றது'' என்ருர் திரு. சோமு.

''என்ன தலேப்பு?''

''போராட்டங்கள்'' என்ருர் நல்லபெரு மாள்.

''நீங்கள் எந்த ஜில்லா?''

''திருநெல்வேலி – பாளேயங்கோட்டை யில் இருக்கிறேன்.''

திருநெல்வேலி......நல்ல தமிழ் வளரும் இடம் திருநெல்வேலிக் காரர்களுக்கு தமிழ் சொல்லிக் கொடுத்தேவரவேண்டாம். மண் வாசி. தமிழ் தாஞகவே அவர்கள் வசம் வந்து விடும்போலிருக்கிறது. நல்ல ரசிகர் கள்'' என்று கூறிவிட்டு சில விஞடிகள் மௌனமாஞர். அந்தநேரத்தில் ரசிகமணி டி. கே சி.யின் நினேவு அவர் எண்ணத்தை ஆட்கொண்டிருந்திருக்க வேண்டும். பிறகு கேட்டார், ''எழுத்தேதான் உங்கள் தொழிலா? தமிழ்நாட்டில் எழுத்தை நம்பி வாழமுடியாதே''

''வக்கீலாகவும் இருக்கிறேன்'' என்ருர், நல்லபெருமாள்.

ராஜாஜியின் முகத்தில் புன்னகை அரும் பியது. ''திருநெல்வேலி (Bar)க்கும் இலக் கியத்துக்கும் ரொம்பத்தொடர்பு இருக்கிறது. டி. கே சி. வையாபுரிப் பிள்ளே, காசுப்பிள்ளே, ரா. பி சேதுப் பிள்ளே எல்லாருமே திருநெல் வேலி Barதான். இந்தத் தலே முறைக்கு இவர் கிடைத்திருக்கிருர். கல்கியில் என்ன எழுதுகிறீர்கள்?''

'போராட்டங்கள் என்னும் நாவல் எழுதுகிறேன்'' என்ருர் நல்லபெருமாள் பவ் வியமாக ''இப்போது கதைகளெல்லாம் நான் படிப்பதில்லே. படிக்க முடியவில்லே. செய்தித் தாளேக்கூட ஒருவர் படித்துக் காட்டவேண்டி யிருக்கிறது. போராட்டங்கள் எதைப் பற் றியது?''

''கம்யூனிஸ்ட் கட்சியின் தத்துவங்களே யும் பயங்கரங்களேயும், கம்யூனிஸ்ட்களின் தலேமறைவு நடவடிக்கைகள் பற்றியும் எழுது கிறேன்''.

''ஓ......! நல்லகாரியம் செய்கிறீர்கள் இந்த நாட்டு மக்களுக்கு இது ஒரு நல்ல தொண்டு. எழுதுங்கள் மக்களுக்கு உரைக் கும்படி எழுதுங்கள். இப்படி யாராவது செய் தால்தான் உண்டு. இல்லேயென்ருல் மக்க ளுக்கு உண்மையே தெரியாமல் போய்விடும். ஆனுல் இப்போது இதைப்பற்றியெல்லாம் சிந்தித்து யாரும் எழுதுவதாகத் தெரிய வில் லேயே ஏதோ (quick popularity)க்காக எதை யெல்லாமோ எழுதித் தொலேகிருர்கள்'' என்ருர் ராஜாஜி. பிறகு கேட்டார், கம்யூ னிஸ்ட்டுகளின் நடவடிக்கை பற்றி எழுத உங்களுக்கு ஆதாரம் என்ன?''

''திருநெல்வேலியில் அம்பாசமுத்திரத் துக்குப் பக்கத்தில் பாலதண்டாயுதமும் வேறு சில கம்யூனிஸ்ட்டுகளும் சதிசெய்து ஒரு வரைக்கொலே செய்தார்கள். அந்த வழக்கை ஆதாரமாக வைத்துத்தான்''

''ஞாபக மிருக்கிறது. அந்த வழக்கை நடத்த பிரத்தியேகமாக ஒரு ஜட்ஜ்கூட நிய மிக்கப்பட்டாரே'' என்று கூறி அந்தச் சதி வழக்கை நினேவில் கொண்டு வந்தார். பிறகு சொன்ஞர்:

''எழுதுங்கள். இந்த மாதிரி மக்களுக்கு அவசியமானதையே எழுதுங்கள். நீங்கள் இளேஞர். இன்னும் எவ்வளவோ எழுத முடியும். இந்த மாதிரி தரமானவற்றை

மக்களைச் சிந்திக்கத் தூண்டும் விதத்தில் எழுதுங்கள்.''

சற்று நேரம் மௌனமாயிருந்தார்.

''என்னவெல்லாமோ கதைகள் எழுது கிறார்கள். வாழ்க்கையில் நடைபெறாத விஷயங்களையெல்லாம் நடைபெறுவது போல் எழுதி இலக்கியத்தைப் போலி யாக்குகிறார்கள். காதல் கதைகள் நடைமுறைக்கு ஒவ்வாத விஷயங்கள். யாரும் இப்போது காதலுக்காக உயிரை விட்டுக் கொண்டிருப்பதில்லை. இன்றும் சமுதாயத் தில் பெரியவர்கள் பார்த்து முடிவு செய்யும் திருமணங்கள் தாம் நடைபெறுகின்றன. கண்ணியமாகவும் வாழ்கிறார்கள். அங்கொன் றும் இங்கொன்றுமாக சில உணர்ச்சி வசப் பட்டவர்கள் தற்கொலை செய்திருக்கலாம் ஆனால் சமுதாயம் முழுவதுமே காதலுக்காக உயிரை விட்டுக் கொண்டிருப்பது மாதிரி எழுதித் தொலைக்கிறார்கள். உண்மையில் யாரும் அப்படிச் செத்துக் கொண்டிருப்ப தில்லை. வாழ்க்கையில் காதல் ஒன்று தானா? வேறு எவ்வளவோ நல்ல விஷயங்கள் இருக் கின்றனவே'' என்றார். சற்றுநேரம் சிந்தனை யில் ஆழ்ந்தார். பிறகு சற்று எரிச்சலுடனும் கோபத்துடனும் பேசினார். ''நிறையப் பேர் எழுத்தை நிர்வாணமாக்கிக் கொண்டிருக்கி றார்கள். ஆபாசமாக எழுதுவது இலக்கிய மா? கண்ணியமாக எழுத வேண்டும். எழுதுவது புனிதமான தொழில். அதில் அனாசாரம் வரக்கூடாது. ரியலிஸமாம்.

அசிங்கமாக எழுதுவதா ரியலிஸம்? இளைஞர்களுடைய மனதையும் அறிவையும் கெடுத்துக்குட்டி சுவராக்குகிறார்கள். எழுத் தை நிர்வாணமாக்கக் கூடாது. நிர்வாணத் தில் அழகு கிடையாது. ஒரு பெண்ணை நிர் வாணமாக வெகுநேரம் பார்த்து ரசிக்க முடி யாது. நிர்வாணம் அருவருப்பானது. ஒரு பெண்ணின் அழகு, அவள் உடைஉடுத் தும் விதத்தில்தானிருக்கிறது. அதுமாதிரி தான் இலக்கியத்தையும் உடை உடுத்தித் தான் காட்டவேண்டும். அதுதான் அழகு. எழுத்தை நிர்வாணப்படுத்தி அவமானப் படுத்தக்கூடாது. நம்முடைய பண்பாட்டை யும் கலாச்சாரத்தையும் நாசமாக்கும்படியாக எழுதுவது ஈனமானதொழில் cheap popularity க்கு ஆசைப்பட்டு அசிங்கமாக எழுதக்கூடாது எழுதுவதற்கு ஒரு purnose வேண்டும்: நீங் கள் எழுதுங்கள். தரத்தைவிட்டுக் கீழே இறங்காதீர்கள். அசிங்கங்கள் காலப்போக் கில் அழிந்துவிடும். போராட்டங்கள் நாவல் மாதிரி இந்நாட்டு மக்களின் அறிவையும் சிந்தனையையும் தூண்டக்கூடிய நல்ல விஷ யங்களை மட்டுமே எழுதுங்கள். காசுக்கோ புகழுக்கோ பேராசைப்பட்டு உங்கள் தரத் தைக் குறைக்காதீர்கள். எழுதுங்கள். நன்றாக எழுதுங்கள். என்னுடைய ஆசீர் வாதம்'' என்று கூறிவிட்டு மணியைப் பார்த் தார். மணி நான்கு.

ராஜாஜியிடம் விடை பெற்றுக்கொண்டு மூவரும் எழுந்தபோது ராஜாஜியும் எழுந்து நின்றார். பிறகு நல்லபெருமாளின் தோளைப் பற்றியவாறு வாசல்வரை நடந்து வந்தார். வாசப்படியில் நின்றவாறே திருநெல்வேலி யில் உள்ள சில நபர்களைப்பற்றி விசாரித்தார். கடைசியில் ''சரி போய் வாருங்கள். எழுது வதை விட்டுவிடாதீர்கள். ஒரு purpose உடன் எழுதுங்கள். மற்றவற்றைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்'' என்று கூறிக் கரம் குவித்தார். பிறகு, ஃபாருக்கியைப் பார்த்து'' போய்வாருங்கள் டில்லியில் உங்களால் முடிந்ததைச் செய்யுங்கள். கடவுள் அருள் இருந்தால் உங்கள் எண்ணம் ஈடேறும் போய் வாருங்கள்'' என்றார்.

ராஜாஜியின் வீட்டை விட்டு வெளியே வந்த மூவரும், சக்திவாய்ந்த ஒரு சந்நிதியின் முன்னிருந்து அருள் பெற்றவர்களைப்போல், மிகுந்த மன நிறைவுடன் காணப்பட்டார்கள்.



# " இளைய பாரதத்தின் இதயமலர் "

கவிஞர்: மித்ரா. வள்ளிமணாளன்

1) இளையதலை முறையின் இதய மலரே
உன் பாதம் தொட்டு எழுதுகின்றேன்
இளைய பாரதத்தின் இனிய தலைவா!
நின் பாதம் தொட்டு வணங்குகின்றேன்!

2) கருப்புக் கண்ணாடி அணிந்து
கைத்தடி கையில் பிடித்து
கம்பீர தோற்றமுடன் வருகின்றாய்
எங்களின் இதயமலராய் இருக்கின்றாய்

3) வாடா மலராய் வற்றாநதியாய்
உனைக் கண்டோம் வாழ்நாளில்
வற்றிய வயிராய் ஒட்டியஉடலாய்
உழைக்கின்றோம் நம் நாட்டில்

4) காலைக் கதிரவன் நிதம் வருகின்றான்
மாலைக் கருக்கலில் ஓடி மறைகின்றான்
இளைய பாரதத்தில் இன்னும் ஒளி இல்லை
இனிய பாரதத்தில் இன்னும் ஒளி இல்லை

5) அரசியல் கூட்டுக்கு நீயே சாட்சியென
அணையா விளக்கை ஏற்றி வைத்தாய்
சட்டத்தின் நடுவில் திட்டங்கள் தீட்டுகின்றார்
திட்டத்தின் இடையில் குற்றங்கள் புரிகின்றார்

6) நாளுக்கு ஒருகூட்டு நன்றியில்லை
ஆளுக்கு ஒருஓட்டு பயனில்லை
நாளுக்கு ஒருகட்சி ஆளில்லை
ஆளுக்கு ஒருகட்சி உண்மையில்லை

7) இதையெல்லாம் எண்ணித் தவிக்கின்றோம்
நீயோ இம்மண்ணில் உறங்கிவிட்டாய்
சாணக்கியன் எனும்பெயர் பெற்றுவிட்டாய்
இதயத்தில் பூத்தமலராய் இருந்துவிட்டாய்

# ராஜாஜியிடம் தெரிந்து கொண்டவை

ஜி. கே. சுந்தரம்

1962 தேர்தலில் நான் சுதந்திரக் கட்சி வேட்பாளனுக கோவை பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டேன். என் தேர்தல் பிரசாரத்திற்காக தள்ளாத வயதிலும் கோவை வந்து பல கூட்டங்களில் பேசிய நிகழ்ச்சிகளை என்னுல் மறக்க முடியாது. ஒரு கூட்டத்தில் அவர் பேசுவதற்கும், மற்றொரு கூட்டத்தில் பேசுவதற்கும் மாறுதல் இருக்கும். கருத்துக்கள் புதியது புதியதாக வரும். அவர் பேச்சை எத்தனை கூட்டங்களில் கேட்டாலும் அலுப்புத்தட்டாது.

அவருடன் எனக்கு ஏற்பட்ட தொடர்பில் மறக்க முடியாத சம்பவம் ஒன்று, அவர் கோவையில் 1962ல் சுற்றுப்பயணம் மேற் கொண்ட சமயம். உடுமலைப்பேட்டையில் இரு நிகழ்ச்சிகளில் அவர் கலந்து கொள்ள வேண்டும். அதற்கான ஏற்பாடுகளை செய்தேன். விசாலாட்சி பெண்கள் கல்லூரியில் பிற்பகலில் உரையாற்றுவதும், இரவில் பொதுக்கூட்டத்தில் பேசுவதும் ஆகிய இரு நிகழ்ச்சிகள்.

அன்று கோவைக்கு ஈ. வெ. ரா. விஜயம் செய்தார். அவருக்கு ஜி. டி. நாயுடு விருந்தளித்தார். நகர பிரமுகர்கள் பலர் அழைக்கப்பட்டனர். ராஜாஜி வந்திருப்பதை நாயுடு அறிந்து அவரையும் அழைத்தார். தட்டாமல் ராஜாஜி கலந்து கொண்டார்.

அன்றைய விருந்தில் பப்பாளியும் விருந்தினர்களுக்குப் பரிமாறப்பட்டது. அதை ராஜாஜி ருசித்துச் சாப்பிட்டார். அதை முடித்துக் கொண்டு நாங்கள் உடுமலை நோக்கி புறப்பட்டோம். போகும் வழியில் அவருக்கு வயிற்றில் வலி ஏற்பட ஆரம்பித்து விட்டது. அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். நேரம் ஆக ஆக காய்ச்சலும் வந்து விட்டது.

உடுமலைப்பேட்டை நெருங்கும் நேரத்தில் பெரியவர் ''ஜுரம் வந்து விட்டது போல் தோன்றுகிறது, டாக்டரிடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்றார். உடுமலை சேர்ந்தவுடன் பிரபல டாக்டரை வரவழைத்து அவரைப் பார்க்கச் செய்தேன். டாக்டர் உடலைப் பரிசோதனை செய்து விட்டு 'வயிற்றில் அஜீர்ணமாக இருக்கிறது, என்ன சாப்பிட்டீர்கள்?' எனக் கேட்டார். பப்பாளி சாப்பிட்டதை ராஜாஜி சொன்னார். அதுதான் காரணம் என டாக்டர் கூறி மருந்து எழுதிக் கொடுத்தார்.

அந்த மருந்துகளினால் என்ன ஏற்படும் என்று டாக்டரை விபரமாகக் கேட்டு தெரிந்து கொண்டார். ஜுரத்தை குறைப்பதற்காக ஒன்றும், அஜீர்ணத்தைப் போக்குவதற்கு இன்னொன்றும் என்று டாக்டர் கூறிய பிறகுதான் மருந்தை அவர் சாப்பிட்டார்.

இதற்கிடையே கல்லூரி நிகழ்ச்சி குறித்து பேச ஆரம்பித்தார். தம்மால் வர முடியாமல் போய் விட்டதே என்று கவலை தெரிவித்தார். ''எனக்கு பதிலாக நீங்கள் போய் கலந்து கொள்ளுங்கள்'' எனக் கூறினார். வேறு வழியில்லாமல் நான் போய் விட்டு வந்தேன்.

இரவு பொதுக்கூட்டத்திற்காகவாவது வரலாமோ என்று பார்த்தால், ராஜாஜி அந்த அளவு குணமடையவில்லை. அதிலும் என்னைப் பேசும்படி பணித்தார். ஆனால் அவர் கூறிய அறிவுரைகள் என்னால் மறக்கமுடியாதது.

''பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு நீங்களே பேசுங்கள். நான் வரப்போவதில்லை என்று முதலில் சொல்லி விட வேண்டாம். உங்கள் பேச்சை முடித்த பிறகு கடைசியாக, உடல் நலம் சரியில்லாமல் இருப்பதால் கலந்து கொள்ள முடியாமற் போய்விட்டது என்பதைத் தெரியப் படுத்துங்கள்'' என்று எனக்கு குழந்தைக்கு சொல்வதைப் போல் நிதானமாகக் கூறினார். நான் எங்கு முன்னால் இந்தச் செய்தியை சொல்லி விடுவேனோ என்ற அச்சம் ஏற்பட்டதால் அவ்வாறு தெரிவித்தார். நான் முன்னதாகக் கூறிவிட்டால் கூட்டத்திற்கு வந்தவர்கள் முன்னதாகவே கலைந்து விடுவர்கள். நான் பேசுவதை கேட்க முடியாமல் போய்விடும் என்பதற்காக எனக்கு எச்சரித்தது மிகவும் பயனுள்ளதாக அமைந்து விட்டது.

# ராஜாஜியின் மதுவிலக்கும், ஜனநாயகமும்

ஜி. எஸ். மதுரநாயகம்

இந்திய பேரரசின் ஜனநாயகத்தைக் காக்க கடைசி வரை போராடிய மூதறிஞர் ராஜாஜி தான் ஸ்தாபித்த சுதந்திரக் கட்சியிலும் கடைசி காலம் வரை அந்த ஜனநாயகத்தை மதித்துக் கட்டிக் காத்து வாழ்ந்து வந்தார்கள் என்பதற்கு ஒரு நிகழ்ச்சி நினைவு கூறுகிறேன்.

1971–ல் இந்தியாவை காப்போம், ஜனநாயகத்தை காப்போம் என இரு பெரும் தலைவர்கள் ராஜாஜியும், காமராசும் இணைந்து இந்திய அரசியல் அரங்கில் தேர்தல் களத்தை சந்தித்து முடிந்த நேரம்; தமிழ்நாடு சுதந்திரக் கட்சியின் பொதுக்குழு கல்கி தோட்டத்தில் மூதறிஞர் ராஜாஜி அவர்கள் தலைமையில் கூடிற்று. கட்சியின் வளர்ச்சியைப் பற்றி பொதுக்குழு உறுப்பினர்கள் தங்கள் தங்கள் கருத்துக்களை பகிர்ந்து கொண்ட நேரம். இணைச் செயலாளர் பதவி பிரச்னைகள் வந்த பொழுது சென்னையைச் சேர்ந்த டாக்டர். எம். சந்தோசம், திரு. வி. எஸ் ஸ்ரீகுமார், திரு. வி. தேவநாதன், திரு. டி. எஸ். சந்தானம் ஆகியோர்கள் சென்னைக்கே இணைச் செயலாளர் பதவியும் இருக்க வேண்டும் என்ற கருத்தை எடுத்துக் கூறினார்கள்.

தமிழகத்தின் தென் பகுதி, கிழக்குப் பகுதி, மேற்குப் பகுதி ஆகியவைகளுக்கு இணைச் செயலாளர் பதவி தர வேண்டும் என்ற கருத்திற்கு பொதுக்குழு உறுப்பினர்கள் முழு ஆதரவு தந்தார்கள். பொதுக்குழுவின் உள்ளத்தை உணர்ந்த உத்தமர் ராஜாஜி அவர்கள் தேர்தல் நடத்தி இணைச் செயலாளரை தேர்ந்து எடுக்கச் சொல்லி விட்டார்கள். பலர் போட்டியிட்டார்கள். கடைசியில் நெல்லை திரு டி. ஆர். சங்கரநாருயணன், அவர்கள் 100க்கும் அதிகமாக வாக்குகள் பெற்று வெற்றி வாகைசூடி தமிழக இணைச் செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டு ராஜாஜி அவர்களின் ஆசீர்வாதத்தோடு இணைச் செயலாளர் பதவி பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள்.

மதுவிலக்கு கொள்கையை தமிழகத்தில் அமுலாக்கிய ஆசான் ராஜாஜி அவர்கள், தமிழக அரசு மீண்டும் மதுவைத் திறக்கப்போகிறதை தடுத்து நிறுத்தி ஏழை எளிய மக்களை யும், பாட்டாளி விவசாய பெருங்குடி மக்களையும் இளைஞர் சமுதாயத்தையும் காக்க, தனது தள்ளாத வயதிலும், அடாத மழையிலும் நனைந்து கொண்டு தமிழக முதல்வராக இருந்த திரு. கருணாநிதி வீடு தேடிச் சென்று மதுவிலக்கை எடுக்க வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். ஆனல் தி. மு. க. அரசு கள்ளுக்கடைகளை திறந்து ஏலம் விட்டது. அப்

பொழுது தமிழக சுதந்திராக் கட்சிக்கு, கள்ளுக்கடை ஏலத்தை மறியல் செய்யச் சொல்லி அறிக்கை வெளியிட்டார்கள். அன்றும், இன்றும், என்றும் தியாகத்தின் இருப்பிடமாகவும் வீரத்தின் விளை நிலமாகவும் இருந்த திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த சுதந்திராக் கட்சி பிரமுகர்கள் பலர். திருநெல்வேலி தாலுகா அலுவலகத்தில் வைத்து நடைபெற்ற கள்ளுக் கடை ஏலத்தை மறியல் செய்தார்கள். திருநெல்வேலி பாலம் காவல் நிலையம் போலிசார் வழக்கு தொடர்ந்தார்கள். ஷெ வழக்கு திருநெல்வேலி சப் மாஜிஸ்டிரேட் முன்பு விசார ணைக்கு வந்தது. 10 பேருக்கு தலா ஒரு வாரம் அதாவது 25—10—71 முதல் 31—10—71 முடிய சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. மதுவிலக்கு மறியலில் கலந்து கொண்டு சிறை சென்று திரும்பியவர்களை மூதறிஞர் ராஜாஜி அவர்கள் மனமார வாழ்த்தி ஆசீர்வதித்து பாராட்டினார்கள்.

பிறகு நடந்த மதுவிலக்கு பாத யாத்திரைக்கு டி. ஆர். சங்கர நாராயணன் தலைமை வகித்து மாவட்டம் முழுவதும் 45 நாட்கள் பல தொண்டர்களுடனும், சர்வோதய சங்கம், ஜில்லா விடுதலை போராட்ட வீரர் சங்கம் ஆகியவர்கள் ஒத்துழைப்புடன் நடத்தி முடித்தார். இதை ஸ்வராஜ்யாவில் ராஜாஜி திருநெல்வேலி ஊழியர்களை வெகுவாக பாராட்டி எழுதினார்கள்.

மதுவிலக்கு கொள்கையையும், ஜனநாயகத்தையும் கடைசி வரை கட்டிக்காத்த சக்கரவர்த்தி ராஜாஜி அவர்கள் வெற்றியோ, தோல்வியோ, இகழ்ச்சியோ, புகழ்ச்சியோ எதையும் தாங்கும் இதயத்தோடு கொள்கைத் தங்கமாக குல விளக்காக வீரத்தின் உறை விடமாக தியாக சீலராக குணக்குன்றாக வாழ்ந்து வந்த மூதறிஞர், அன்னார் புகழ் வாழ்க.



தந்திரிக்குத் தந்திரியாய்
தாசனுக்குத் தாசனாய்
மந்திரிகள் மெச்சுமதி
மந்திரியாய் – வந்துதித்த
இன்னருட் செல்வா!
இராஜ கோபாலா நீ
மன்னுலகில் வாழ்க
மகிழ்ந்து.

—ஜூன் 1952 நெல்லை பொருட்காட்சி வைபவத்தை
தொடங்கின முதன் மந்திரி ராஜாஜிக்கு
கவி தேசிக விநாயகம் பிள்ளை
அனுப்பி தந்த கவிதை.

# தமிழ்நாட்டு அரசியலில்
# ராஜாஜி

**பரந்தாமன்**

தன்னை டெல்லியிலிருந்து விடுவித்துக் கொண்டு சென்னை வந்த ராஜாஜி தம் வாழ் நாளிலேயே, முக்கியப் பணிகளான இலக்கியப் பணிகளில் அதி தீவிரமாக ஈடுபடத் தொடங்கினர். வியாசர் விருந்து போன்ற, பல அரிய நூல்களை வழங்கினர். இதற்கிடையேதான். சென்னை மாநில முதல்வர் பதவியை மறுபடியும் 1952ல் ஏற்றுக்கொள்ள வேண்டிய மாபெரும் பொறுப்பு ஏற்பட்டது. மைனரிட்டிக் காங்கிரஸ் அங்கத்தினர்களைக் கொண்டு அதே நேரத்தில் மிகப் பெரும்பான்மை எதிர் கட்சியினரைக் கொண்ட, மிகச் சிறந்த அறிவாளிகளையும். முக்கியத் தலைவர்களையும், நேருக்கு நேர் சந்திக்க வேண்டிய பயங்கர சூழ்நிலையில், முதல் மந்திரி பதவியை எழுபத்தி நாலு வயதில் ஏற்றுச் செயல் புரிந்தார்.

கேரளம். கன்னடம், தெலுங்கு. தமிழ் நாடு அடங்கிய அந்தப் பெரிய மந்திரி சபையை, மிகத் திறமையாகச் சமாளித்து, அதன் முன் பத்து வருடங்களாக நடந்து வந்த, புகார்களுக்கு இடம் தந்து வந்த நிர்வாகக் குறைகளை மாற்றி அமைத்து, கட்டாய ரேஷனல் பத்து வருடங்களாக மக்கள் பட்டு வந்த அவதியிலிருந்து, ரேஷன் முறையை ஒழித்ததின் மூலம் காப்பாற்றி நில முதலாளி, விவசாயி, பிரச்னைகளில் சரியான அறுபது-நாற்பது திட்டத்தைக் கொண்டு வந்ததின் மூலம் இடது சாரிகளின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தி, மற்ற மாநிலங்களிலிருந்து தமிழகத்தையும், சென்னை தலைநகரையும் வெற்றிகரமாகப் பிரித்து எடுத்துக்காப்பாற்றி, இன்னும் பல புதுப்புது வளர்ச்சித் திட்டங்களுக்கு வழி கோலினர் இராஜாஜி.

இவ்வளவும் செய்தவர் புதியமுறைக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார். அது தொழிலையும் கல்வியையும் இணைப்பாகக் கொண்டது. பாதி நேரம் தொழில். பாதி நேரம் படிப்பு, என்ற முறையில் அவரவர்களுக்கு ஏற்பட்ட பரம்பரைக் குடும்பத் தொழிலில் வளர்ச்சி பெற வேண்டும், என்ற அடிப்படையில் அமைந்தது. குலக் கல்வி என்ற பெயரால் கொண்டு வரப்பட்ட அந்தத் திட்டத்தின் அடிப்படையும். இலட்சியமும் அறிஞர்களால், உலகக் கல்வித் துறை நிபுணர்களால், பாராட்டி வரவேற்கப் பட்டாலும், தமிழகத்தால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர் அமுலுக்குக்கொண்டு வந்த அந்தத் திட்டம் அவரது பேராற்றலுக்கு ஒரு சவாலாகவே அமைந்தது. தமிழகத்தில் உள்ள திராவிடமுன்னேற்றக்கழகத்தினரும், திராவிடக் கழகத்தினரும், காங்கிரஸ் காரர்களில் பலரும், கிட்டத்தட்ட பிராமணர் அல்லாதாரில் மிகப் பெரும் பான்மையாரும் அதைத் தங்களுக்குப் பாதகமாகவே கருதி பெரும் எழுச்சியுடன் அதை எதிர்த்தனர்.

அவர் குடியிருந்த பஸுல்லா ரோட்டின் வீட்டின் முன், திராவிட முன்னேற்றக்கழகத்தினர் தொடர்ந்து மறியல் நடத்தினர். தின

சரி பலர் கைது செய்யப் பட்டனர். அளவுக்கு மீறிய கூட்டத்தைக் கட்டுப்படுத்த அவ்வப்போது போலீஸ் நடவடிக்கைகளும் தேவைப்பட்டன. ஒவ்வொரு நாளும், பஸுல்லா ரோட்டின் மேல்புறம் உள்ள உஸ்மான் ரோடிலும், கீழ்பக்கம் உள்ள திருமலைப்பிள்ளை ரோடு வரையிலும், வீட்டின் இரு பக்கங்களிலும் உள்ள பக்கத்துத் தெருக்களிலும், கழகத்தினர் சாரி சாரியாக போலீஸாரால் தடுத்து நிறுத்தப்படுவர். அவர் பஸுல்லா ரோடின் 60 எண் வீட்டிலிருந்து தனது சிறிய கான்ஸல் காரில் காலை சுமார் 10 மணி அளவில் கோட்டையை நோக்கிச் செல்வார்.

இதை எதிர்த்துக் கூட்டங்களும் சில நடக்காமலில்லை. அவைகளில் இராஜாஜி துணிவுடன் கலந்துகொண்டு விளக்கங்கள் தந்தார், "இந்த அரிய திட்டத்தைத் தவிர, நமது மக்களுக்கு வருங்கால வளர்ச்சிக்கு ஏற்ற திட்டம் வேறு கிடையாது, இதைக் காலப் போக்கில் உணரத்தான் போகிறீர்கள். இதற்கு வகுப்புவாத வண்ணம் பூசப்பட்டு விட்டது. இந்த திட்டத்தைக் கொண்டு வருவதில் நான் ஏதாவது தவறு செய்து இருந்தால், அது எதிர்க்கட்சித் தலைவர்களில் பிராமணர் அல்லாதவர்களில் ஒரு தலைவரை கொண்டு இந்த திட்டத்தைக் கொண்டு வரச்செய்து இருக்கவேண்டும். அப்படிக் கொண்டு வந்து இருந்திருந்தேனுல் இதை துவேஷக் கண்ணோடு பார்க்காமல் நல்லெண்ணத்துடன் ஏற்றுக்கொண்டிருப்பீர்கள்." என்றும் இன்னும் தெளிவுபட தேனும்பேட்டையில் நடைபெற்ற ஒரு மாபெரும் பொதுக் கூட்டத்தில் தெரிவித்தார்.

எதிர் கட்சிகள் எதிர்ப்பதற்கு எந்தவித இடமும் கொடுக்காமல், 'இராஜாஜி ஏற்கனவே அந்த மைனரிட்டி அங்கத்தினர்களை வைத்துக்கொண்டே, வெற்றி கரமாக நிர்வாகத்தை நடத்திக் கொண்டு வருவது பலருக்கு உள்ளூர வெறுப்பை ஏற்படுத்தி இருந்தது. பல்வேறு திட்டங்களை அவர்கொண்டு வந்தது மட்டுமல்ல, கம்யூனிஸ்டுகளுடைய சக்தியை அவர்களது தொழிலாளர் இயக்கத்தின் வலிவை, முறியடித்துக்கொண்டே வந்ததும், மாபெரும் தலைவரான பிரகாசம் மீது நடவடிக்கை தீர்மானம் கொண்டு வந்ததும், தனது மீது நம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வந்து அதில் பெரும் வெற்றி பெற்றதும், எல்லாம் சேர்ந்து, எதிர் கட்சிகள் எதிர்ப்பதற்குப் பிடி கிடைக்காமல் இருந்த நிலையில், திராவிட கட்சியினர் வெளியே நடத்திய போராட்டம் இவர்களுக்கெல்லாம் ஒரு வாய்ப்பாக அமைந்தது. இதே நேரத்தில் காங்கிரஸ் எம். எல். ஏக்களையும், தலைவர்களையும், சலுகைகளுக்கும் சிபாரிசுகளுக்கும் வாய்ப்பில்லாமல் செய்தது காங்கிரஸ்காரர்கள் உள்ளூர எதிர்ப்பதற்கு ஒரு காரணம். ஏற்கனவே ஐந்தாறு வருடங்களாக நடந்து வந்த காங்கிரஸ் ஆட்சிகளில் அவர்கள் பல்வேறு நலன்களைப் பெற்று ருசி கண்டவர்கள். தியாகிகளுக்கும், தியாகத்திற்கும், இராஜாஜி மதிப்புத் தந்து உதவி செய்யாததால் உண்மையிலேவருந்தும் பல நல்ல காங்கிரஸ் காரர்களுக்கும் அவர் மீது வெறுப்பு ஏற்பட்டது. எல்லா எதிர்ப்புச் சக்திகளுக்கும் 'இந்தப் புது முறைக் கல்வித் திட்டம்' அவரைப் பழி தீர்த்துக்கொள்ள உரிய சந்தர்ப்பத்தைத் தந்தது.

ஒரு வகையில், மற்றவர்களை விடவும், காங்கிரஸ்காரர்கள் தான் இராஜாஜியை அதிகமாக எதிர்த்தார்கள் என்று சொன்னுல் இது மிகையாகாது! மற்றக்கட்சியினரும், எதிர் கட்சியினரும், வெளிப்படையாகஎதிர்த்தனர். இதை சமாளிப்பது இலகுவானது. உள்ளூர இருந்து சதி செய்வதும், எதிர்ப்பு சக்திகளுக்குப் பின்னணியிலிருந்து ஊக்கம் தருவதும், காங்கிரஸிலுள்ள முக்கியத் தலைவர்களால் பின்பற்றப்பட்டவை. அப்பொழுது சக்தி வாய்ந்த பெரும் காங்கிரஸ் தலைவராக இருந்த காமராஜர் வெளிப்படையாக மட்டுமல்ல தனிப்பட்ட முறையிலும், கூட அவர்களைக் கண்டிக்கவில்லை.

காமராஜர் தனக்குப் பிடிக்காதவர்களை நேருக்குநேர் எதிர்க்காமல் அவர்களிடம் நல்ல பிள்ளையாக நடந்து, அவர்களை பகிரங்கமாக எதிர்ப்பவர்களை கண்டிக்காமல், அவர்களிடம் நல்ல முறையில் பழகிக்கொண்டு,

மறைமுகமாக எதிர்ப்புச் சக்திகளுக்கு ஆத ரவு தருவதின் மூலம் பல சந்தர்ப்பங்களில் பெரிய மனிதராக நடந்து கொண்டதில்லை.

பக்தவத்சலம் அமைச்சராகப் பதவி வகித் தது மட்டுமல்ல காங்கிரஸின் துணைத்தலைவர், பொருளாளர், செயலாளர், என்ற வகையில் எப்போதும் ஒரு முக்கியமான பதவியில் இருந்துகொண்டும் இருந்தவர். பக்தவத் சலத்தை கறைப்படுத்தியதில் காமராஜருக்கு பெரும்பங்குண்டு. பக்தவத்சலம் பதிலுக்கு எதிர்க்கவும், முடியாமல் நேரில் கேட்கவும் முடியாமல் மிகச்சங்கடப்பட்டார். அதை அவ ரது அரசியல் அனுபவநூலில் மிகவும் பரிதாப மாக குறிப்பிட்டுள்ளார். சமீபத்தில், தின மணிக்கதிரில் வெளிவந்த கட்டுரைகளிலும் காமராஜரின் கண்ணியக் குறைவைப்பற்றி வெளிப்படையாகவே தெரிவித்திருக்கிறர்.

காமராஜருக்கு, இதுபோன்ற வேலை களில் இராஜாஜி, பக்தவத்சலம் இவர்களை எதிர்ப்பதில் மட்டுமல்ல. தனது வலதுகர மாக,மூளையாக,நம்பிக்கைக்குரியவராக. எதை யும் நம்பி செயலாற்றவிடும் கைய்யாளாக இருந்த வெங்கட்டராமனிடம் செய்தார். காமராஜர் முதல்வராக இருந்தபோது அவ ரது பல ஆற்றல் தேவைகளை நிரப்பி, குறை களை மறைத்து, காப்பாற்றிச் சென்ற சக அமைச்சராக விளங்கியவர், வெங்கட்டராமன் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. வெங் கட்டராமனுக்கு தொழில்த்துறை வளர்ச்சி களில் அவர் ஆற்றிய திறமான காரியங் களுக்காக ஏற்பட்ட இந்தியப் புகழை காம ராஜரால் தாங்க முடியவில்லை. அவருக்கு இருந்த உலகத் தொடர்பு, மத்திய ஆட்சியில் உள்ள செல்வாக்கு. பெரும் தொழிலதிபர் களிடம் கொண்டிருந்த ஈடுபாடு, தொழிலா ளர்களிடம் பெற்றிருந்த மதிப்பு, இவைகள் எல்லாம் காமராஜருக்கு சந்தேகத்தையும் பயத்தையும் ஏற்படுத்தியது. (நிற்க)

தான் (ராஜாஜி) பதவி ஏற்கும்ப்டி எல்லோரும் வற்புறுத்தியதையும், இப் போது பதவியிலிருந்து இறக்க எல்லோரும் பாடுபடுவதையும் அவர் சிந்திக்க நேர்ந்தது. இந்த சந்தர்ப்பத்தில் பேராசிரியர்''கல்கி'' மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளக்கூடாது'' என்று கருத்துத் தெரி வித்ததை, அவரது தீர்க்கதிருஷ்டியை எண் ணிப் பார்க்கவேண்டும். இராஜாஜிக்கு மன அதிர்ச்சியை அளித்த சந்தர்ப்பங்களில் இது வும் ஒன்ருகும். அவர் திடச்சித்தரானதால், தவறு என்று உணர்ந்தால், அதைச் சற்றும், தயங்காமல் துணிவுடன் திருத்திக்கொள்ளும் தன்மையினரான அவர், தான் எடுத்துக் கொண்ட கொள்கையில் ஒரு சிறிதும் சந் தேகம் கொள்ளாததால், அந்த நிலையிலி ருந்து சற்றும் மாற்றிக் கொள்ளாமல், யதார்த்த அரசியல் சூழ்நிலையைப் புரிந்து கொண்டு, நடக்கும்'அனுச்சார விஷயங்களை' ''நேருஜியுடன் தொடர்பு கொண்டு விளக் கினர். அவர் சந்தர்ப்பச் சாதகங்களைக் கருதி, இராஜாஜிக்குச் சாதகமான பதில் தரா மல், ''ஜனநாயகத்தில் இந்தமாதிரிச் சூழ் நிலைகள் எல்லாம் தவிர்க்க முடியாதது'' என்ற பொருளில் பதில் தரவும்; இராஜாஜி முடிவுக்கு வந்தார். அதன்படி தானுகவே விலகியும் விட்டார்.

எதிர்ப்பு அணிக்குக் கூட்டம் கூட்டா மல்,தீர்மானம் நிறைவேற்ருமல், போட்டிக்கு ஆள்தேடாமல்,பலப்பரிட்சைகளில் நேருக்கு, நேர் ஈடுபடாமல், உள்ள ஒருவாய்ப்பைத் தந்துவிட்டு ஒதுங்கிக் கொண்டார். ''இராமா யணத்தை முழுவதும் முதலில் இருந்து இறுதி வரை மீண்டும் ஒருமுறை படித்துவிட வேண்டும் என்று அந்தக்காவியத்தைஎடுத்து வைத்தேன். அதைப்படிக்க முடியாமல், பட் டாபிஷேகத்திற்குத் தயாராக இருந்த ராமர், வனவாசம் செல்ல நேர்ந்தது போல நானும் மந்திரி பதவி ஏற்க நேர்ந்தது, விரித்து வைத்த புஸ்தகம் அப்படியே இருக்கிறது. அதை உடனே தொடர இருக்கிறேன்'' என்றுதான் குறிப்பிட்டார்.

இராஜாஜி, காமராஜர் ஆட்சிக் காலத் தில் மேல் சபை உறுப்பினர் பதவியை விடா மல் முக்கியமான விவாத நிகழ்ச்சியின்போது கலந்து கொண்டு வந்தார். தீவிர அரசியல் விவகாரங்களில் ஈடுபடாமல் இருந்தாலும்

தேவைப்படும் போது தனது கருத்துக்களைத் தெரிவிக்காமலில்லை. தொடர்ந்து காங்கிரஸ் ஆட்சி இந்திய நாட்டில் இருந்து கொண்டு வருவதால், பொதுவாக காங்கிரஸ் காரர்களிடம் நேர்மைக் குறைவும் சுயநலமும் ஒழுக்கக் கேடுகள் பெருகவும் நேர்ந்திருக்கிறது என்று இராஜாஜி உணர்ந்தார். இவர்களது தவறான போக்கை தடுத்து நிறுத்த, எதிர் கட்சிகளுக்கு போதிய வலிமை இல்லாமல் இருந்ததையும் அவர்கள் தனித்தனி குழுக்களாகப் பிளவுபட்டு இருந்ததையும்கண்டார். காங்கிரஸ்காரர்களுக்கு, எதையும் செய்யக் கூடிய அளவிற்கு காட்டுத் தனமான மெஜாரிட்டி இருப்பதை எப்படி மாற்றி அமைப்பது? என்பதைப் பற்றி சிந்தித்தார். காங்கிரஸ் காரர்களோ எதைச் செய்தும், எப்படி நடந்தும், பதவியையும்,ஆட்சியையும் காப்பாற்றிக் கொள்வதையே இலட்சியமாகக் கொண்டிருந்தனர்.

பர்மிட், லைசென்ஸ் மற்றும் சலுகைகள் மூலம் ஆட்சியிலுள்ளோர்களும், வெளியில் உள்ள சிலரும், பயன் பெற்று வருவதை தடுத்து நிறுத்தவேண்டும். என்று ஆசைப் பட்டார். மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி, இதை ஒழுங்குபடுத்துவதற்கு ஒரே வழி ஆளும் கட்சிக்கு அளவுக்கு மேல் பெரும்பான்மை இராமல் எதிர்க்கட்சி நியாயமான அளவிற்கு ஆளும் கட்சி அஞ்சக்கூடிய அளவிற்கு இருக்கவேண்டும் என்று கருதினார். எந்த சந்தர்ப்பத்திலும் நமது ஆட்சிபோய் எதிர் கட்சி ஆட்சிக்கு வந்து விடமுடியும், என்ற அச்சம் ஆளும் கட்சிக்கு இருந்தால் தான் யோக்கியமாக நடக்கும். என்ற அபிப் பிராயத்தை நேரும் போதெல்லாம் சொல்லத் தொடங்கினார் எதிர்க்கட்சித் தகுதியையே பெற முடியாத அளவிற்கு இருந்தால், அது ஜனநாயகம் ஆக முடியாது. ஆகவே எதிர்க் கட்சி இடம்பெற காங்கிரஸ் கட்சியே கூட வழி வகுக்கலாம் என்றும் கூறினார். இராஜாஜியின் கருத்துக்கள் பொதுவாக வரவேற்கப்பட்டன. பாராட்டவும் பட்டன. ஆக அவைகளைச் செயல்படுத்துவது நடைமுறையில் இயலாமலிருந்தது.

அதே நேரத்தில் இராஜஜாஜி தனிப்பட்ட முறையில், தனது அறிவாற்றல்களால், மத்திய ஆட்சிகொண்டு வந்த பலவித சீர் திருத்தங்களையும். சட்டத்திருத்தங்களையும், எதிர்த்து வெற்றி பெற்றார். சுதந்திர நாட்டில் நேரடி போராட்டத்திற்கு இடம் இல்லை. என்ற கருத்துக் கொண்ட இராஜாஜி சட்டத்திற்கும் நியாயத்திற்கும் உட்பட்டு, காட்டு மெஜாரிட்டி போன்று நடந்த ஆட்சிக்கு தன்னந்தனி ஒரு ஆளாக எதிர்க்கும் ஓர் மாபெரும் சக்தியாக இமயம் என நிமிர்ந்து நின்றார். இது உலகில் எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் நடந்திராத ஒன்றாகும்.

*(ராஜாஜி $\frac{100}{100}$ என்ற நூலிலிருந்து)*

---

__குறிப்பு :__

ராஜாஜி கோஷ்டி காமராஜ் கோஷ்டி என்று தமிழ் நாட்டில் ஏற்படக் காரணம் 1941ல் தோன்றியது. ராஜாஜி 1941 அக்டோபரில் சிறையிலிருந்து வந்தார். நாட்டு நடப்பை ஊன்றி கவனித்தார். தான் சட்ட சபைத் தலைவராக இருப்பதால், சட்ட சபை காங்கிரஸ் கட்சியை கூட்டி அதில் ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்.

முஸ்லீம் லீக்கின் பாகிஸ்தான் கோரிக்கையை ஒப்புக் கொண்டு இந்தியாவில் தேசீய சர்க்கார் ஏற்படுவதை சாத்யமாக செய்ய வேண்டும்.

இதை யொட்டி காங்கிரஸ் காரிய கமிட்டி கூடிற்று. ராஜாஜி தீர்மானத்துக்கு ஆதரவு இல்லை. அதை வைத்து தமிழ் நாட்டில் ராஜாஜியை பதவி மோகம் பிடித்தவர் என்று சிலர் பிரச்சாரம் செய்தார்கள். அதை தொடர்ந்து ராஜாஜி எதிர்ப்பு கிளர்ச்சி படிப் படியாக வளர்ந்து வந்தது. அதற்கு காமராஜ் தலைமை வகித்தார். பிறகு காங்கிரஸ் ஆகஸ்ட் புரட்சியில் சிக்கியது. 1945 வரை

தேக்கநிலைமை. ராஜாஜி ஒருவரே தேசீய விடுதலை இயக்கத்தை பத்திரிகைகள் மூலம் நடத்தி வந்தார். யுத்தம் நின்றது. இந்திய பிரச்னை தலை தூக்கியது. தேர்தல் வந்து விடும் என்று நிச்சயமாயிற்று.

அப்பொழுது 1945 அக்டோபர் 30–31ல் திருப்பரங்குன்றத்தில் ஊழியர் மகாநாடும் காங்கிரஸ் கமிட்டி கூட்டமும் நடைபெற்றது. அப்பொழுது ராஜாஜி மீண்டும் காங்கிரஸில் சேர்ந்திருந்தார். ராஜாஜியை காங்கிரஸுக் குள்ளேயே வரவிடக்கூடாது என்று ஒரு கிளர்ச்சி தொடங்கப்பெற்றது ராஜாஜி வேண்டும் என்ற அன்பர் கூட்டத்தை மூர்த்தண்யமாக திருப்பரங்குன்றம் மகா நாட்டில் தாக்கினார்கள். எனினும் 31ம் தேதி ராஜாஜி அன்பர்கள் அங்கேயே ஒரு கூட்டம் நடத்தி ராஜாஜிக்கு ஆதரவு தெரிவித்தார்கள். பிறகு சீர்காழியிலும் கூடி ராஜாஜி ஆதரவு தந்தார்கள். எனினும் ராஜாஜி சென்னை சட்ட சபை தேர்தலில் ஒதுங்கி நின்றார்.

சுதந்திர திட்டம் உறுதியாயிற்று. இடைக்கால சர்க்கார் அமைக்கப்பெற்றது. ராஜாஜி தில்லிக்கு இடைக்கால சர்க்காருக்கு சென்று விட்டார்கள். தமிழ்நாட்டில் கோஷ்டி பூசல் கூடாது என்று தன் அன்பர்கள் கோஷ்டியிடம் காமராஜை கூப்பிட்டு ஒரு சமரஸ மகா நாடு நடத்தச்சொன்னார். அப்படியே ராஜாஜியின் மெய்யன்பரான ஒருவர் பொறுப்பில் செய்துங்கநல்லூரில் காமராஜ் அவர்களை அழைத்துமகா நாடு நடத்தப்பட்டது ஆயினும் மூன்றுவது கிளர்ச்சி தொடங்கியது, குலக் கல்வியை வியாஜமாகக் கொண்டு. ராஜாஜி அன்பர்களை—அறவே அரசியலைவிட்டு விலகச் செய்ய அது பயன்பட்டது காமராஜ், ராஜாஜி முன்னிலையில் ராஜாஜியின் மெய்யன்பரான சி. பி. சுப்பையா காங்கிரஸ் கமிட்டி தலைவராகவும், தான் காரியதரிசியாகவும் இருக்க ஒப்புக் கொண்டார். கடைசியில் தானே தலைவராக போட்டியிட்டார். சி. பி. சுப்பையா நூறு வோட்டுக்களும் காமராஜ் நூற்றம்பத்தைந்து வோட்டுகளும் பெற்றார்கள். முடிவாக ராஜாஜி கோஷ்டி காங்கிரஸிலிருந்து விலகிக் கொண்டது. காமராஜின் தனியாட்சியாக காங்கிரஸ் செயல்பட்டது:

---

# ஆங்கிலேயன் வியந்த ஆச்சாரியார்

S. குருநாத் ஜோஷி, சங்கரன்கோவில்.

*1938ல் ஆங்கிலேயன் ராஜாஜி கையில் மாகாண சுயஆட்சி நடத்த ஒப்பித்தபொழுது, இந்தியன் கையில் ஆட்சி பொருப்பு கொடுக்கப்பட்டால் ஆளமுடியுமா? என்று பல பரீக்ஷை செய்தார்கள் போலும்; மற்ற மாகாணத்தினர். தயங்கினர், ஆனல் ராஜாஜி அவர்கள் அவர்களுக்கு ஊக்கம் கொடுத்து ஏற்க வைத்தார். உடனடியாக தமாஷ் வரிபோட்டு விற்பனை வரி போட்டு பல கோடிக்கணக்கான பணம் குவிந்தது சுய ஆட்சிக்கு அந்தோ! ஆங்கிலேயன் போதுமான பணமில்லாமல் ஆட்சியை ஒப்பித்தும்கூட அதிக திறமையுடன் வரியால் சுய ஆட்சியை நடத்தியதை மற்ற மாநிலங்களிலும் வரி போட்டு வெற்றிகரமாக ஆட்சி நடத்தினர்கள். அன்று அவர் திறமைக்கு மூக்கிலே விரல் வைத்தான் ஆங்கிலேயன். அவர் அறிவு ,இரண்டாவது உலக மகாயுத்தத்தில் இந்த வரியை காப்பி அடித்து கிரேட் (great) பிரிட்டன் பூராவும் அறிவிக்கப்பட்டு ஆங்கிலேயன் வெற்றிகண்டான் பண பலத்தில் ஆகையால் ''இந்தியாவின் அறிவு பொக்கிஷம்'' என்று பட்டம் சூட்டினர்கள் ஆங்கிலேயன் ராஜாஜிக்கு, என்றும் மறக்கக்கூடிய விஷயமா என்ன? ராஜாஜி நாமம் வாழ்க! வாழ்க!! வாழ்க!!!*

# சமதர்ம சிற்பி

எம். சுப்ரமண்யம், அரியநாயகிபுரம்.

தமிழினம் ஈன்றெடுத்த தனித்தலைவர்! தமிழ் ஊற்றெடுக்கும் அமிழ்து! பொன்றுப் புகழும், நின்ற சொல்லும், நீடுதோரினிக்கும் செய்வினைச் சிறப்பும் தமிழர் உய்த்துயர்ந்து வான்புகழ் ஈட்டும் வழி நெறி கண்டு, வாழ் வாங்கு வாழும் ஆற்றலை உணர்ந்து எண்ணி உணர்த்தும் செயல் சிற்பியாக விளங்கிய! நமது மாமேதை ராஜாஜி அவர்கள்.

குஞ்சை காக்கும் கோழி போல, குடியோம் பும், குடியரசுக் கொற்றவனாக திகழ்ந்தவர். சூழ்ந்தோர் நெஞ்சு சுழிக்காவண்ணம், ஆழ்ந்த பற்றோடு வாழ்ந்து காட்டியவர் நம் அறிஞர் ராஜாஜி அவர்கள். அலை அலையாக மாற்றார் எதிர்ப்பு சூழ்ந்துவரினும், மலை, மலையாக தூற்றல் பெய்யினும், பனிபோல் நீக்கும் பாதை காட்டியவர் நம் தலைவர் ராஜாஜிதான்.

இமயம் தொட்டு, குமரிவரை, ஈடில்லாத தலைவராய் டெல்லியையும் திகைக்க வைத்த தீரராய் விளங்கியவர் நமது அன்புத் தலைவர் ராஜாஜி அவர்கள். தீயகருத்துக்கு, கருத்தை செலுத்தாமல், தூய கருத்துக்கு தனது காலத் தையும், உழைப்பையும், செலவழித்த செம்மல்.

*தோன்றிற் புகழொடு தோன்றுக—அஃதிலார்*
*தோன்றலின் தோன்றுமை நன்று.*

என்ற வள்ளுவர் வாக்கின்படி, இந்தியாவின் புகழேணியில் சிறந்தவராக விளங்கியவர் ராஜாஜிதான். இவரைப் போன்று குறுகிய காலத்தில் புகழிலும், பதவியிலும், இமயத்தை எட்டியவர் எவரும் இல்லை என்பது மாபெரும் உண்மை. மாற்றாரின் சொல்லுக்கு சொல்லும், கருத்துக்கு கருத்தும், சுவையாகவும் சூடாகவும், சுறுசுறுப்பாகவும் மதி நுட்பம் மிளிரும் வகையில் தெரிவிப்பதில் நமது அன்புத் தலைவர் மறைந்த மாமேதை ராஜாஜிக்கு ஈடு இணை எவரும் கிடை யாது. மாவீரன் லெனினுக்கு ஒரு ஸ்டாலின், மாஜினிக்கு ஒரு கரிபால்டி, வால்டருக்கு ஒரு ரூசோ, காந்தியாருக்கு ஒரு ராஜாஜி. இந்திய துணைக் கண்டத்தின் போற்றத்தக்க ராஜ தந்திரியாகவும், விளங்கியவர் நமது ராஜாஜி தான் என்பதை யாரும் மறக்கவோ, மறுக் கவோ முடியாது.

ஏழைகளின் நல்வாழ்விற்கும், தாழ்த்தப் பட்டவர்களின் சமுதாயம் உயர்த்தப்பட்ட தற்கும், சமதர்ம சோசலிசம், மலர்வதற்கும், ஓய்வின்றி, உறக்கமின்றி, உழைத்த நமது ஒப்பந்த உத்தம தலைவனின் நூற்றாண்டுவிழா எடுப்பது இந்த நாட்டிற்கே பெரிய கவுரவ மாகும். தெய்வீகம், இலக்கியம், பத்திரிகை, அரசியல், எந்த துறையை எடுத்தாலும் அவ ருக்கு நிகர் அவரே தான். அவர்களது திறமையை எழுத தொடங்கினால் இந்த மலரும் காணாது, அதற்கான சொல்லும் தமிழில் கிடைக்காது என்பது என் எண்ணம். மறைந்த மாமேதை ராஜாஜி அவர்கள் முதலமைச்சராக இருந்த காலத்தில் அமைச்சர்கள் யாவரும் தளகர்த்தர் கள் போல பணியாற்றி விரைவாக முடிவு செய் தும், திறமையாக செயல்படுத்தியும் வந்ததை இந்நாடு மறந்துவிட முடியாது.

யாமறிந்த புலவரிலே
கம்பனைப்போல்
வள்ளுவர்போல்
இளங்கோவைபோல்

என்று பாடிய பாரதியார் இன்று இருந்திருந் தால், கம்பன், வள்ளுவன், இளங்கோ, வரிசை யில், ராஜாஜி அவர்களையும் சேர்த்து புக ழாரம் சூடியிருப்பார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

*மாமேதை ராஜாஜியின் நாமம் வாழ்க!*

# நறுமணம் வீசும் நன்மலர்

*சி. இரா. சந்தானம், திருச்சி.*

"உண்மை என்பது பூட்டி வைக்கப்படும் பொக்கிஷம் அல்ல. அது உரிமை போராட்டத்தின் வெற்றிக் கொடி" என்று வால்டேர் கூறியபடி அந்த உரிமை கொடியை வான் நோக்கி பிடித்தவர் இராஜாஜி.

அஞ்சாத நெஞ்சமும், கெஞ்சாத வாழ்வும் படைத்த இருபதாம் நூற்றுண்டின் நக்கீரனுக நம்மிடை வாழ்ந்தார் இராஜாஜி.

பிரமுகர்கள் பெருகிவிட்ட நேரத்தில், உண்மைக்காக, ஒழுங்கிற்காக போராடிய ஒரே தலைவர் இராஜாஜி.

பிறுறு தட்டாத, அபஸ்வரம் இல்லாத இசை மையமான வாழ்க்கையாக அவர் வாழ்க்கை அமைந்தது. ஆனல் 1967-ல் காங்கிரசை மாற்ற அவர் எடுத்த முடிவு "பிசிறு தட்டிய" நிலை என்று கூறுவோரும் நம்மிடையே உண்டு.

ஸ்ரீ இராமபிரானின் "வாலிவதை" போன்று பிரச்னைக்குரியதாகி விட்டது, இராஜாஜியின் "காங்கிரஸ் எதிர்ப்பு படலம்" — இராமன் மரத்திற்கு பின்னல் நின்றது போல், காங்கிரஸ் ஆட்சியை மாற்ற இராஜாஜி தி. மு. க. வின் துணையை நாடினர் கடவுளின் செயல்போல் அதற்கு நாம் காரணம் கேட்க முடியாத அளவு இராஜாஜி அவர்கள் உயர்ந்து நின்ருர்கள்.

மக்களால் ஏற்கப்பட்ட "சக்தி" மீண்டும் வேதாளமாகி விட்டது. இந்த வேதாளத்தை கீழே இறக்குவதே இராஜாஜி அவர்களின் இறுதிக்காலப் பணியாக அமைந்து விட்டது. அவரை நோக்கி வீசப்பட்ட மூன்ருந்தர கண்டனங்களை அவர் லட்சியம்செய்யவில்லை. நிலக்கரி சுரங்கத்தில் இறங்கியவர் கரி படுகிறதே என்று கவலைப்பட்டு பயனில்லை என்ருர்.

"One Man With Courage makes Majority"

என்று பேரறிஞன் ஜாக்ஸன் சொன்னர். பெரும்பான்மையை உருவாக்கும் திறம்மிக்க தனி மனிதனுகத் திகழ்ந்தார் இராஜாஜி.

"இதோ வழி, இப்படி செல்க" எனச் சொல்லும் திறனும் தீர்க்கதரிசனமும் அவருக்கு இருந்தது. புகழ்ச்சி, இகழ்ச்சி என்று பாராமல் தீரச் செயல்களை செய்து காட்டி, சாதனைகளை சரித்திரமாக்கி விட்டார்.

பெரிய பதவிகளில் அமருவதாலேயே பேரறிஞர்களாக யாருமாகி விடமுடியாது. அமர்ந்த நாற்காலிகளுக்கு அகௌரவத்தை தேடித்தந்தவர்கள் தான் அதிகம். வகித்த பதவிகளுக்கு பெருமையைச் சேர்ந்தவர் இராஜாஜி.

"தீண்டாமையே—இந்து மதம்" என்று இருந்த நிலையில் தீண்டாமை அகல பெரும் போரிட்டவர் இராஜாஜி. "சுவாமி சகஜானந்தரை" (ஹரிஜன்) தனது வீட்டிலேயே வளர்த்தார் ஆலயப் பிரவேசத்திற்கு அவர் தலைமை தாங்கியபொழுது இந்து மத எதிர்ப்பாளராக, சனதனத்தை ஒழிக்க வந்த சைத்தானுக அவர் சித்தரிக்கப்பட்டார். அதை ராஜாஜி லட்சியமே செய்யவில்லை.

கல்வி அதிகாரி ஒருவரை பிராமண எதிர்ப்பாளர்" என்று கூறி அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்திய

பொழுது. தனது கடமையை சரிவரச் செய்யும் அதிகாரியின் மீது நடவடிக்கை எடுக்க முடியாது என்று ராஜாஜி முதலமைச்சராக இருந்தபோது கூறினர்.

அவர் சொன்னதைச் செய்தார். செய்ய முடிந்ததையே சொன்ஞர்" அதனுல் இலஞ்ச ஊழலற்ற ஆட்சியை அவருடைய ஆட்சிக் காலத்தில் உருவாக்கமுடிந்தது. கறைபடாத கரங்களும், ஆன்மாவும் உடையவராக திகழ்ந்தார்.

அவரது ஆட்சிக் காலத்தில்தான் "அதிகாரமுடையவர்களாக" அதிகாரிகள் திகழ்ந்தனர். தஞ்சாவூர் கொடும் புயலுக்கு ஆளாகியது. மரங்கள் சாய்ந்தன. ஊரெல்லாம் வெள்ளம் அலேபாய்ந்தது. கலெக்டர் என்ன செய்வதென்று கேட்கிருர் முதலமைச்சரை. "அதிகாரமுடைய அதிகாரி நீங்கள்... என்ன செய்வீர்களோ தெரியாது......... நாளேயே தஞ்சை மாமுல் நிலேமைக்கு வரவேண்டும்" என்ருர் இராஜாஜி. கலெக்டர் விரைந்து செயல்பட்டார். சாலேயில் விழுந்த மரங்களே யார் வேண்டுமானுலும் எடுத்துக் கொள்ளலாம் என்று அறிவித்தார். இரண்டே நாட்களில் தஞ்சை பழைய நிலேமைக்கு திரும்பிவிட்டது. முதலமைச்சர் இராஜாஜி மத்திய அரசுக்கு மனுபோட வில்லே. மாமுல் நிலே வந்ததற்காக "புயல் வென்ருன்" என்று பட்டம் சூட்டிக்கொள்ளவில்லே.

முதலாளி வர்க்கத்தின் தலேவராக இராஜாஜி சித்தரிக்கப்பட்டார் "கதவடைப்பை சட்ட விரோதம்" என்று கூறி, முதலாளித்துவத்தின் வல்லாயுதத்தை பிடுங்கியமுதலும் முடிவுமான முதலமைச்சர் ஆவர். "தஞ்சை பண்ணேயாள் சட்டம்தான்" விவசாய பெருங்குடி மக்களின் அடிமைச் சங்கிலியின் முதல் பிணிப்பை உடைத்த சட்டமாகும். கடன் நிவாரணச் சட்டம் இயற்றி தனது மென்மையான கரங்களால் ஏழைகளின் கண்ணீரைத் துடைத்தார். மதுவிலக்கை தீவிரமாக அமுல் நடத்தி அடக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட கோடானுகோடி மக்களுக்கு உண்மையான விடுதலேயை நல்கினர்.

"சிலவற்றிற்காக வாழ வேண்டும்" என்ருன் கார்லேல் "சிலவற்றிற்காக சாகவேண்டும்" என்ருன் மார்டின்-லூதர்கிங். சிலவற்றிற்காக வாழ்ந்து சிலவற்றிற்காக மறைந்தார். இ ரா ஜா ஜி . அவரை இதயத்தில் வைத்து பூஜிப்போம்.

---

## பெருமைக்குரிய விஷயம்

ருஷ்யத்தலேவர் குருஷேவ் சென்னேக்கு விஜயம் செய்த போது ராஜாஜியுடன் சென்னே ராஜ்பவனில் பதினேந்து நிமிடம் தான்பேசினர். குருஷேவ் ராஜாஜியின் நிலே அணுகுண்டு விஷயத்தில் பூரணமாக புரிந்து கொண்டார். ராஜாஜி அணுகுண்டு சோதனேயை நிறுத்துமாறு நிகழ்த்தியபிரசங்கங்களேயும், கட்டுரைகளேயும் அறிக்கைகளேயும், தொகுத்து காலஞ்சென்ற ஸ்ரீ மேணிகா பெல்டன் வெளியிட்டிருந்த "மனிதகுலம் கண்டிக்கிறது" Mankind Portests, என்ற நூலே வாங்கிச்சென்று ருஷ்யமொழியில் வெளியிட்டார். ருஷ்யாவுக்குச் சென்றதும் ராஜாஜியுடன் கடிதத்தொடர்பு கொண்டு "ஆறுமாத காலத்துக்கு ருஷ்யா சோதனே குண்டுகள் வெடிப்பதில்லே" என்று ராஜாஜியின் யோசனேப்படி ஒருதலேபட்சமாக குருஷேவ் அறிவித்தார். ஒரு நாட்டுத் தனிமனிதன் வேண்டுகோளுக்கிணங்கி ஒரு வல்லரசு செயல்பட்டது! அது தமிழர்கள் பெருமைப்பட வேண்டிய விஷயமல்லவா!

# ராஜாஜியும் - குற்ருலமும்

தீப. நடராஜன்

குற்ருலம் என்ருல் — அது மலை வளம் காணவோ அருவியில் நீராடவோ அல்ல. ரஸிகமணி டி. கே. சி என்னும் ஞான ஊற்றிலே மூழ்கித் திளைப்பதற்காகத்தான் குற்ருலம் தள்ளாத வயதிலும் துணையே இல்லாமல், சாதாரண அவசியமான வசதிகளைக் கூட பொருட்படுத்தாமல் ஆவலோடும் ஆனந்தத் தோடும் குற்ருலத்தை நோக்கி வருவார் ராஜாஜி.

இந்த உலகத்தில் ராஜாஜி பார்க்காத பெரியவர்கள் அபூர்வம் என்றே சொல்லலாம்.

ராஜ தந்திரிகள் மட்டுமல்ல, கலைஞர்கள், விஞ்ஞானிகள், சமூகசீர்திருத்த வாதிகள், உலகப் பிரசித்திபெற்ற மருத்துவர்கள், மன்னர்கள், சமயத் தலைவர்கள் இப்படிப் பல்வேறு பட்ட நிலையில் உள்ளவர்களும் ராஜாஜி அவர்களோடு தொடர்பு கொள்ளத் துடித்து வந்தார்கள் என்பது யாவரும் அறிந்ததே.

ஆனுல் மேலே குறிப்பிட்டவர் களுக்கெல்லாம் ஒட்டி உறவாட முடியாத பெரியவராய் இருந்தார் ராஜாஜி.

துன்பங்களிலிருந்தும் துயரங்களிலிருந்தும் விடுபடவும், சரியான வழி காணவும் ராஜாஜியின் உதவியை நாடி வந்தவர்கள் பலர்.

ஆனுல் ஓரளவுக்குத் தான் அவர்களால் அவரிடம் நெருங்க முடியும். அப்படி ஒரு வரையறை ராஜாஜியிடம் இருந்தது.

ஆனுல் அன்னியோன்யமாக, தான் வேறு அவர் வேறு என்னும் பேத உணர்வே இல்லாமல் ஒன்று பட்டு ராஜாஜி இந்த உலகில் உறவாடியது இரண்டு பேர்களுடன் தான்,

ஒன்று காந்திஜி, இரண்டாவது ரஸிகமணி டி. கே. சி.

மேலே குறிப்பிட்ட இரண்டு பேரும் தன்னலமில்லாதவர்கள், ஒரு லட்சிய நோக் கோடு வாழ்ந்து வந்தவர்கள். அன்பும் அருளும் வழங்கி வந்தவர்கள்.

மகாத்மா காந்தியின் அன்பு சில வேளைகளில் கடினமாக இருக்கும். அன்பு கொண்ட வரிடத்து சிறு குறையிருந்தாலும், பிழை நேர்ந்து விட்டாலும் அவர் மன்னிக்க மாட்டார். பொது வாழ்வில் உள்ளவர்கள் எந்தவிதக் குறைகளுக்கும் ஆளாகாது இருக்க வேண்டும் என்று நினைத்தவர் மகாத்மா காந்தி.

டி. கே. சி.யின் அன்பு மடை திறந்த வெள்ளம்போல் பாய்ந்தது, அன்பு கொண்ட வர்களிடம் உள்ள நிறையை மட்டும் எடுத்துக்கொண்டு குறையை மறந்து மன்னித்து விடும் அன்பு ரஸிகமணியின் அன்பு.

ரஸிகமணியின் அன்பு என்னும் அதிசய சக்தியின் ஆற்றலை யெல்லாம் கண்டு உணர்ந்து, அனுபவித்து மகிழ்ந்தவர் ராஜாஜி.

> ''அன்பு என்னும் வெள்ளத்தில் மூழ்கி அந்த தெய்வீக மகிழ்ச்சியை அனுபவித்து நன்றி என்னும் தெய்வ வழிபாட்டில் இருக்கிறீர்கள். இது தங்கள் எழுத்தில் உருவம் கொண்டு விளங்குகிறது. அதைப் படித்துப் படித்து நான் அடையும் சந்தோஷம் நான் அங்கே வந்திருந்தாலும் அடைந்திருக்க மாட்டேன்.
>
> சிநேகம் உண்டாக்கிக் கொள்வதும் அதைக் காப்பாற்றுவதும் ஒரு தெய்வ வரமாகத்தான் ஒருவன் அடையலாம். இந்த சக்தி தாங்கள் பெற்றிருக்கிறீர்கள்.
>
> வால்மீகி ராமாயணத்தில் சுக்ரீவன் ஹனுமானுக்குச் சொல்கிருன்:
>
> ''சர்வதா சுகரம் மித்ரம் துஷ்கரம் பரிபாலனம்'' எப்பவும் நட்பு சுலப மாகச் செய்து கொள்ளலாம். ஆனல் அதைக் காப்பாற்றுவது கஷ்ட மான வேலை'' தாங்கள் இதை சுலபமாக சந்தோஷமாக செய்து விடு கிறீர்கள். வளர்ப்பதில் என்ன இருக்கிறது. இது ஒரு உண்மை. உங்களுடைய இந்த சக்தியினுல் எத்தனை பேருக்கு வாழ்க்கையில் ஒரு சந்தோஷம்!''.

மேலே எடுத்துக் காட்டியிருப்பது 9—2—52 தேதியில் ராஜாஜி ரஸிகமணி டி. கே. சி.க்கு எழுதிய கடிதத்தின் பகுதி.

ராஜாஜி, டி. கே. சி. அவர்களைப் பற்றிச் சொன்னதைப் பார்த்தோம். ரஸிகமணி, ராஜாஜி அவர்களைப் பற்றி என்ன சொன்னுர்கள் என்று தெரிய வேண்டாமா?

கம்பர் இதயத்தோடு இதயம் வைத்துப் பழகியவர்கள் ரஸிகமணி. கம்பர் சிருஷ்டித்து நடமாட விட்ட பாத்திரங்களெல்லாம் கம்பர் நேரில் கண்டவர்களே என்று சொல்வார்கள் ரஸிகமணி அவர்கள்.

கம்பரின் சிறந்த பாத்திரங்களெல்லாம் இந்த மண்ணுலகில் வாழ்ந்தவர்கள் என்ருல் இன்றும் அப்பேர்ப்பட்ட பாத்திரங்கள் இருக்கத்தானே வேண்டும்?

ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் ராஜாஜி அவர்களுக்கு 10—5—43 அன்று எழுதிய கடிதத்தில் சொல்கிருர்கள் தாம் கண்ட பாத்திரம் பற்றி;

> ''தங்கள் அரிய உண்மை சாதனத்தை யார் கண்டார்கள். இந்த விதமாக சாதனம் செய்தவர்களைத் தமிழ்நாட்டில் தான் கண்டு அனுபவித் திருக்கிருர் கம்பர் — கண்டதை உருவாக்கினுர் தசரதனுக. தங்களை நேரில் காணுமலேயே கண்டதுபோலப் பல சந்தர்ப்பங்களில் பேசுகிருர். இது காரணமாகத் தங்கள் முன்னிலையில் கம்பரது பாடல்கள் சில வற்றை வாசிப்பது எனக்குக் கஷ்டமாய்ப் போய் விடுகிறதுண்டு''

ரஸிகமணி — ராஜாஜி இணைப்பும், நட்பும் தமிழ்நாட்டின் கலை, இலக்கிய வர லாற்றிலே மிக முக்கியமானதொரு நிகழ்ச்சியாகும்.

---

# வழி கிடைத்தது

டாக்டர். சந்தோஷம்

ராஜாஜி நூற்றுண்டு விழாவை யொட்டி திருநெல்வேலி மாவட்டத்தில் நடைபெற விருக்கும் வைபவங்களில் ஒன்ருன இந்த சிறப்பு மலர் வெளியீட்டில் எனக்கு ஒருபங்கு கிடைத் தமைக்கு பெரும் நன்றியுள்ளவனுக இருக்கின்றேன். இந்தக்கட்டுரையை எழுதுகின்ற சமயம் ராஜாஜியின் அருகிலிருந்து ஒரு மாணவனுகக் கல்விகற்ற தருணங்கள் ஞாபகத்திற்கு வருகின்றது. ராஜாஜி அதிக நம்பிக்கை வைத்திருந்த சீடர்களில் நான் இருந்தமை குறித்து நான் பெருமை கொள்ளாதிருக்க இயலாது. ராஜாஜியின் வாழ்நாளில் திருநெல்வேலி மாவட்டத்தில் நடத்தி வைத்த ஒரு ஒப்பற்ற முன்னேற்றத்தைக்குறித்து இந்த இதழில் எழுதுவதே நல்லது எனஎண்ணு கின்றேன்,

ராஜாஜி இந்நாட்டு கவர்னர் ஜெனரலாக இருந்த சமயம் இச்சம்பவம் எட்டையா புரத்தில் நடைபெற்றது. எட்டையாபுரத்தில் நாடார்கள் குடியிருப்பு உண்டு. அங்கிருந்து சுடுகாட்டுக்குச் செல்லவேண்டுமென்ருல் எட்டையாபுரம் ஜமீந்தாருக்குச் சொந்தமான நிலமாகிய இடைவெளியைத்தாண்டித்தான் செல்லவேண்டும். இந்த நிலம் ஜமீந்தாருக்குச் சொந்தமான இடமானதால் அதன்மேல் பூரணஉரிமை அவருக்கு உண்டு, அந்த நிலத்திற்குள்யாரை அனுமதிக் கலாம் யாரை அனுமதிக்கக்கூடாது என்று உத்திரவிட அவருக்கு அதிகாரம் இருந்தது.

நாடார் பிணங்கள் அந்த வழியாகத் தம்முடைய நிலத்தைத்தாண்டி செல்லக்கூடாது என்ற உத்தரவு பிறப்பித்தார் உத்திரவை மீறி அவ்வழியில் பிணங்களை எடுத்துச்செல்வதைத் தடுத்தார். யானையை வைத்து வழிமறித்தார் என்றுகூட சொல்லப்படுகிறது. இதன் உண்மை எனக்குத்தெளிவாகத்தெரிய வில்லை. நாடார்களுக்கு இந்த உத்தரவுபெரும் இடைஞ்சலாக இருந்தது. ஆகையால் அந்த நிலம் மிக முக்கியமான பகுதியானதால் அதை பொதுமக்களுக் கான கிராமச்சொத்தாக மாற்றவேண்டுமென்று நீதிமன்றத்திற்குச் சொன்னுர்கள். வழக்கை நடத்துவதற்கு பிரபல வழக்கறிஞரான முன்னுள் மந்திரி காலஞ்சென்ற டானியல் தாமஸ் ஏற்றுக்கொண்டு நடத்திஞர்.

வழக்குத் தோல்வியில் முடிந்தது. அத்தருணம் கவர்னர் ஜெனரல் ராஜாஜியிடம் டேனியேல் தாமஸ் அவர்கள், எட்டையாபுர ஜமீந்தாரால் நாடார் குடியிருப்புக்கு ஏற்பட்டி ருக்கும் தொல்லையையும், நீதிமன்றத்தில் வழக்குத் தோல்வியடைந்தது பற்றியும் தெரிவித்தார் ராஜாஜி, கே ரா. துரைச்சாமி நாடாரை அழைத்தார். இவர் ராஜாஜி பக்தர். தூத்துக்குடியைச் சேர்ந்தவர், ராஜாஜி தன்கைப்பட ஒரு கடிதம் எழுதினுர். ''ஜமீந்தார் அவர்களே, தங்கள் ஊரில் நாடார்கள் குடியிருப்புக்கும், சுடுகாட்டிற்கும் இடையே உள்ள தங்களுக்குச் சொந்தமான நிலத்தை கிராமத்திற்கு சொந்தமான நிலமாக உடனே பதிவாளரிடம் பதிவு செய்துவிட்டு அச்செய்தியை இக்கடிதம் கொண்டுவருபவரிடம் கொடுத்தனுப்பவும் என்று எழுதி அனுப்பினுர் உடனடியாக எட்டையாபுரம் ஜமீன்தார், பதிவாளரிடம் அந்த நிலத்தை பொது சொத்தாக கிராமப்பஞ்சாயத்திற்கு வழங்கியதாகப்பதிவு செய்து ராஜாஜிக்கு அனுப்பினர்.

இராஜாஜி எவ்வளவு கருத்துடன் பொதுமக்களின் இன்னல்களை நீக்க உழைத்தார் என்பதற்கு இந்த உண்மை நிகழ்ச்சி ஒரு எடுத்துக்காட்டு.

# ராஜாஜி ஓர் கணிப்பு

தீ. ரெங்கநாதன்

அண்ணல் ராஜாஜி அவர்களின் வாழ்வு உலகத்தில் சிறந்த சரித்திர நிகழ்ச்சிகளில் ஒன்று. உலகத்தில் பிறந்து வாழ்ந்து மறைந்த எந்த மேதையையும் விட எல்லா வகைகளிலும் உயர்ந்தவரே ராஜாஜி.

அவர் சாதாரண அரசியல் வாதியாக வாழவில்லை. ஒரு வக்கீலாக, முனிசிபல் சேர்மனுக துவங்கிய அவர் வாழ்வு தியாகத் தால் புடம் போடப்பட்டு உலகத்தின் ஒப் புயர்வற்ற மேதையாக ஆசானுக தேசத்தலை வனுக முடிவுற்றது.

இந்தியாவின் கடைசி கவர்னர் ஜென ரலாக வாழ்ந்த பொழுதும் மிக எளிமை யாகவே வாழ்ந்தார். இல்லாதவர், எளிமையாக வாழ்ந்துதான் தீரவேண்டியவர்களின் வாழ்வுபோல் அல்ல. இந்தியாவின் தலைமை பதவியில் இருந்த பொழுதும் மிக எளிமை யாகவே வாழ்ந்து வழிகாட்டினுர். அவர் இருந்தவரை கவர்னர் ஜெனரல் மாளிகை ஒரு ஏழையின் கூடாரமாகவே இருந்தது.

அவர் வங்கத்தின் கவர்னராக பதவி யேற்ற பொழுது வங்கம் மிகவும் மோசமான நிலையில் இருந்தது. யாரும் அப்பதவி யேற்க தயாராக இல்லாத நேரம். தனது உள்துறை அமைச்சர் பதவியை உதறி எறிந்து விட்டு கவர்னர் பதவியை ஏற்ருர். எந்த வங்க மக்கள் அவருக்கு எதிர்ப்பு தெரி வித்தனரோ அதே மக்கள் கண்ணீருடன் அவர் பதவிகாலம் முடியும்பொழுது வழி யனுப்பும் வகையில் அப்பதவியை மக்கள் நலனுக்கு செய்யும் சேவைபோல் நடத்தி வெற்றி கண்டார்.

தான் தீவிரமாக சிந்தித்து எடுக்கும் நியாயமான முடிவுக்கு எப்பேர்பட்ட எதிர்ப்பு எங்கிருந்து வந்தாலும் அஞ்சாது விட்டுக் கொடுக்காது நிற்கும் தீரம் உலகத்தில் அவ ரளவிற்கு யாருக்கும் இருந்ததில்லை. மகாத்மா காந்தியாருடன் தான் மாறுபட்ட பொழுதெல்லாம் தனது கொள்கைக்கே முக்யத்வம் கொடுத்தார். பாகிஸ்தான் பிரிக் கப்பட்டே ஆகவேண்டும் என்று அவர் எடுத்த முடிவுக்கு ஏற்பட்ட கடுமையான எதிர்ப்புக்கண்டு சிறிதும் அஞ்சவில்லை. அவர் அதற்காக ஜின்னுவிடமும் விளக்கங் கூறத் தவறவில்லை. பாகிஸ்தான் என்பது மணல் மீது கட்டப்படும் மாளிகை என்ருர். பாகிஸ்தான் பிரிந்து இருபத்து ஐந்து ஆண்டு களுக்குள் கிழக்கு வங்கம் பாகிஸ்தானி லிருந்து பிரிந்து விடும் என்று அன்றே ராஜாஜி அவர்கள் கூறினுர்கள் என்று மவுண்ட்பேட்டன் B. B. C. நிகழ்ச்சி ஒன்றில் சமீபத்தில் குறிப்பிட்டார். அவரைத்தவிர யாராலும் ஊகிக்க முடியாத தீர்க்க தரிசனம் இது. சாணக்கியனே, பிளேட்டோவோ, அரிஸ்டாடிலோ, சாக்ரட்டீஸ்ஸோ கூட இவ்வளவு தீர்க்கதரிசிகளாக வாழ்ந்த தில்லை.

இந்த அரசில் எந்தப்பதவியிலும் இல் லாது சுயராஜ்யா, கல்கிபோன்ற பத்திரிகை களில் எழுதுவதை மட்டும் மேற்கொண்டி ருந்த காலத்தில் உடல் தளர்ந்து தொண்டு கிழமாக இருந்த பருவத்தில் அணுஆயுத தடை பற்றி அன்றைய அமெரிக்க ஜனுதிபதி கென்னடியிடம் பேச்சுவார்த்தை நடத்த அமெரிக்கா சென்ருர். அன்று அவா நடத்திய பேச்சு வார்த்தை அமெரிக்க

அரசின் போக்கையே மாற்றியது. அவர்களு டைய பேச்சுவார்த்தை முடிந்து பத்திரிகை நிருபர்கள் ஜனாதிபதியை பேட்டிகண்ட பொழுது உலகத்தில் வாழும் மனித இனத் தின் "மாபெரும் சக்தியை" நான் சந்தித் தேன் என்றார். இப்படி ஒரு பெருமை இந் தியத் திருநாட்டில் இனி யாருக்கு கிடைக்கப் போகிறது?

பிரபல பிரிட்டிஷ் எழுத்தாளரான திருமதி மோனிகா பெல்டன் அவர்கள் ராஜாஜியைப் பற்றி புஸ்தகம் எழுதவேண்டும் என்ற நோக் கத்துடன் இந்தியா வந்து பல மாநிலங்களி லும் சுற்றி அவரைப் பற்றி கிடைத்த தகவல் களைச் சேகரித்த பின்பு அவரைச் சந்திக்க வருகிறார். தன்னைப்பற்றி செய்யும் எந்தப் பிரச்சாரத்தையும் விரும்பாத ராஜாஜி அவ ருடைய எண்ணத்தை ஏற்க மறுத்தார். அவர் எவ்வளவு கூறியும் விடாப்பிடியாக மோனிகாபெல்டன் தான் எடுத்த காரியத்தை மேற்கொண்டார். *"I meet Rajaji"* என்ற பெயரில் அவர் எழுதிய புஸ்தகத்தில் ராஜாஜி யுடன் அவர் நடத்திய விவாதங்கள் எத்தனை வளம் பொருந்தியவை என்பதை முழுக்க உணரமுடியும். ராஜாஜி அவர்களுடன் பல மாதங்கள் விவாதங்கள் புரிந்து புஸ்தகம் எழுதக்கூடிய பெரும் பெயர் பெற்றவர் திருமதி மோனிகா பெல்டன்.

ராஜாஜியின் வாழ்க்கைச் சரித்திரத்தில் சிறந்த அத்தியாயமே அவர் சுதந்திரக்கட்சி ஆரம்பித்த காலம்தான். சுதந்திரக் கட்சியை ஆரம்பித்த தருணம் இந்திய அரசியலில் காங்கிரஸ் கட்சியை எதிர்க்க எந்தக்கட்சி யுமேவலுவடையாதிருந்த நேரம், இருந்த பெரும்பான்மையான எதிர்க்கட்சிகளும் காங் கிரஸைப் போலவே வரட்டுச் சோசலிஸம் பேசி இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு பெரும் பங்கம் விளைந்து கொண்டிருந்த நேரம் இரண்டாவது உலகப்போரில் சின்னாபின்னமாக்கப்பட்ட ஜப்பானும் ஜெர் மனியும் பொருளாதார தன்னிறைவு பெற் றும் அவற்றைவிட சகல விதத்திலும் நமது தேசத்தில் கச்சாப் பொருள்கள் இருந்தும் நாம் பின்னேடிச் சென்றிருந்த நேரம் ஒரு சிறந்த பொருளாதாரக் கொள்கையை முன் வைத்து தேசத்தின் பல அறிஞர்களின் துணையுடன் 1959ம் ஆண்டு அண்ணல் ராஜாஜி அவர்கள் சுதந்திரக்கட்சியை ஆரம் பித்தார் டாக்டர் *K, M.* முன்ஷி, மினுமசானி *Prof* ரத்னசாமி மற்றும் நூற்றுக்கணக்கான கல்விமான்களும், பொருளாதார மேதைகளும் தேசபக்தர்களும் உடனிருக்க ராஜாஜி தனது 80 வயதுப் பருவத்தில் உலகக் கம்யூனிஸ்ட் டுகளுக்கே சவாலாக சுதந்திரக் கட்சியை ஆரம்பித்தார். இன்று இந்திய அரசியல் அரங்கில் காங்கிரஸ் கட்கிக்கு ஏற்பட்ட தோல்விக்கும் ஐந்து கட்சிகள் சேர்ந்து அந்த வெற்றியை அடைந்ததற்கும் வித்திட் டவரே ராஜாஜிதான். எதிர்கட்சிகளின் ஓட்டுக்கள் சிதறுவதை தடுத்து ஒரேகூட்டாக எதிர்கட்சிகள் தேர்தலைச் சந்திக்காதவரை காங்கிரஸை வீழ்த்த முடியாது என்று பல முறை எடுத்துக் கூறிவந்தார்.

சீனவுடன் 1962ல் ஏற்பட்ட போரின் போது ஏற்பட்ட கடுமையான தோல்விக்கு நமது வெளிநாட்டுக்கொள்கைகளே காரணம் என்பதை அரசுக்கு இடித்துரைத்ததோடல் லாமல் கிருஷ்ணமேனனை நேரு சர்க்கார் பதவியிலிருந்து நீக்கவும் அவரே காரணமாக இருந்தார். சுதந்திரக்கட்சியினர் பாராளுமன் றத்திலும் மானில சட்ட மன்றங்களிலும் அர சின் குறைகளை ஆணித்தரமாகவும் அமைதி யான, நாணயமான முறையில் எதிர்க்கக் கூடிய நிலையே ராஜாஜியிடம் கற்றபாடம் தானே. சி. ஆர். தாஸாக இருந்தாலும் சரி மகாத்மாவாக இருந்தாலும் தன்னால் ஒத்துக் கொள்ளமுடியாத கொள்கையை எப்படி ராஜாஜி அவர்கள் தீவிரமாக எதிர்த்தாரோ அதேபோல் தனது கட்சிக்காரர்களையும் வளர்த்தார் இந்திய சமூகத்திற்கு ஜீவாதார உரிமையை கற்பித்தவரே ராஜாஜிதான்.

ராஜாஜி இன்று நம்மிடையே இல்லை. இரண்டாம் முறை தாம் அடிமைத்தளத் திலிருந்து பெற்ற விடுதலையை காண அவர் நம்மிடையே இல்லை. அவர் தம்மில் வாழ்கிறார் நம் நெஞ்சில் வாழ்கிறார். அதுவே நாம் அவருக்கு செய்யும் அஞ்சலி.

# ராஜாஜி பற்றி ஒரு நினைவு

திருச்சிராப்பள்ளி N. ஆதிசேஷன்

கொடுமையை எதிர்த்து நில். இது மகாகவி பாரதியாரின் வாக்கு. இதனை பார்த்தபோது என் சிந்தனைகள் இன்றைய தொழிற்சங்கங்களின் நிலவரத்தினை சிந்திக்க தொடங்கியது.

காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரை தொழிலாளர்களுக்கும், பொது மக்களுக்கும் தெரிந்த ஒரே குறல் ஸ்ட்ரைக், கதவடைப்பு, பொதுச் சொத்துக்களுக்கு நாசம். இவைகளின் பின்னணி என்ன.

தொழிலாளர்களை அரசியல் வாதிகளும், சில இடைத்தரககர்ளும், நாட்டின் பொருளாதரத்தில் சிறிதும் அக்கறை இல்லாத ஒரு கும்பலும் தொழிளாளர்களை தங்களின் கைப்பாவையாக தங்களின் சுயலாபம் கருதி ஆட்டுவிக்கின்றனர்கள். தொழிலாளர்களும் எடுப்பார் கைபாவையாக, தங்களின் மனசாட்சிக்கு மாருகவும் நடக்க ஆரம்பித்து விட்டார்கள்.

தொழிலாளர்களுக்கு நல்லது செய்வது போல் காட்டி பாசாங்கு செய்து வருபவர்களின் பிரதான நோக்கங்கள் தேர்தல் சமையத்தில் தங்கள் கூட்டத்திற்கு ஓட்டு சேர்ப்பதும் தொழிலாளர்களிடம் சந்தா வசூல் செய்து தங்கள் வயிற்றினை வளர்ப்பதுடன் அவர்களுடைய பொருளாதாரத்தை வளம்படுத்திக் கொள்வதும்தான். இப்படி ஒரு கும்பல் தொழிலாளி, முதலாளி என்று சண்டைகளை கிளப்பிவிட்டு அதில் "குரங்கு"மத்யஸ்த்தம் செய்து வருகிறது. இவர்களுக்கு நாட்டு வளர்ச்சியில் அக்கரை கிடையாது.

இந்த மந்தபுத்திக்காரர்களின் நோக்கம் மகன் இறந்தாலும் பாதகமில்லை, மருமகள் தாலி இழக்கவேண்டுமென்பதே. இந்த சங்கத்தினை நடத்துபவர்கள் பெரும்பாலோர் அரசியல்வாதிகள்தான். இவர்கட்கு எப்படி தொழில் மீது அக்கரை ஏற்படமுடியும். அனைத்தும் சுயநலத்தில் தானே இருக்கமுடியும்.

தொழில் சங்கத்தினை நடத்துபவர்கள், தொழிலாளர்கள் வாங்கும் சம்பளத்திற்கு தகுந்த வேலை செய்ய வேண்டும் என்ற கட்டுப்பாடு வேண்டும். கடமையில் ஏமாற்று இருக்கக்கூடாது. பிறகு உரிமையை கேட்க அவர்களுக்கு ஊக்கம் ஊட்டவேண்டும்.

குறித்த நேரத்தில் குறிப்பிட்ட வேலையை செய்யவில்லை என்ருல் அதற்கு உள்ள ஊதியத்தை பிடிக்கச் சிபாரிசு செய்யும் தகுதியை பெற்றிருக்க வேண்டும். இவர்கள் இவ்விதம் நடந்து கொள்ளாததுடன் முதலாளிகளோ, நிர்வாக அதிகாரியோ ஏன் சரியான அளவு வேலை செய்யவில்லை என்று கேட்டால் அவர்களுக்கு கிடைக்கும் பட்டம் தொழிலாளர்

துரோகி என்பது. இதை யார் சொல்கிருன் என்ருல் நாட்டின், உற்பத்தித் திறனையும் பொருளாதாரத்தையும் பலவீனப்படுத்தும் இடைத்தரகர்கள். காந்தி அடிகளும், ராஜாஜி அவர்களும் ஒன்றினை அடிக்கடி குறிப்பிட்டார்கள். அதுதான் ஒரு தொழிற்சாலைக்கு ஒரு தொழிற் சங்கம் தான் இருக்க வேண்டும். ஆனல் அதுவும் தொழிலாளர்களால் நடத்தப் படவேண்டும் என்ருர்கள். ஆனல் இன்றைய நிலை அப்படி இல்லை. அரசியல்வாதிகள். அடிக்கடி ஜப்பானில் தொழிற் வளர்ச்சி பற்றி மேடைகளில் பேசி வருகிருர்கள். ஆனல் அங்கு அவ்விதம் முன்னேற்றம் அடைய காரணமாக உள்ள பல விஷயங்களை சொல் வதில்லை. இந்திய தொழிலாளிகள் பெரும்பாலானவர்கள் தாங்கள் பணிபுரியும் இடத்தினை புனிதமாக கருதுவதில்லை. அதை பொழுது போக்கும் இடமாகவும், தங்கும் விடுதியாகவும் தான் பயன் படுத்திக்கொள்கிருர்கள். இது நீடிக்க அனுமதித்தால் தொழிற்சாலைகள் மூடவேண்டிய காலம் வந்தே தீரும்.

கருவியுங் காலமுஞ் செய்கையிர் செய்யும்
அருவினையும் மாண்டதமைச்சு. (குறள்: 631)

ராஜாஜி அவர்கள் திருச்சி மாவட்டத்தில் சுதந்திராக் கட்சி மாநாட்டிற்காக கரூருக்கு வந்தார். வழியில் ஓர் கூட்டம், அட்டை ஏந்தி நிற்கின்றனர். விவசாயிகள் கைத்தறி நெசவாளர்கள் என எழுதப்பட்டிருக்கிறது. ராஜாஜி திரும்பிப் போ என வசை புராணம் பாடுகின்றனர் ராஜாஜி அவர்கள் காரை நிறுத்தச் சொல்லி கூட்டத்தினரைப் பார்த்து புன்னகை புரிகின்ருர். விசாரிக்கிருர், விவசாயிகளும், நெசவாளர்களும் என் அருகில் வாருங்கள் எனச் சொன்னவுடன் ஒருவரும் வரவில்லை. அதில் விவசாயிகளோ, நெசவாளர்களோ இல்லை. அங்கிருந்த அனைவரும் கம்யூனிஸ்ட் அரசியல் வாதிகள் அவர்கள் தங்களுடைய கட்சியை சேர்ந்தவர்களை வெளியூர்களில் இருந்து அழைத்து வந்த தாக தெரிந்து. அன்றைய தினம் கரூரில் நடந்த பொதுக்கூட்டத்தில் பின்வருமாறு பேசினர். "தொழிலாளர்கள் தான் தொழில் சங்கங்களை நடத்த வேண்டும். அப் போதுதான் தொழில் மீதும், தொழிலாளர் மீதும் பரிதாப உணர்வுகள் ஏற்படும். முத லாளிகளை நியாயமான கோரிக்கைகட்கு பணிய வைக்கவும் தொழில் சங்கங்களுக்கு தர்மத் தின் அடிப்படையில் அதிகாரம் உண்டு.

அப்படி எல்லாம் இல்லாத சங்கங்கள், அரசியல் வாதிகளின் நன்மைக்கும், தொழிலாளிகளின் தீமைக்கும் வழிவகை செய்யும். தற்சமயம் தொழிற்சங்கம் நடத்து பவர்கள். ஆடு நனைகிறதென்று ஓனய் வருத்தப்படுவதுபோல் பாசாங்கு செய்யும் சுய நலமுள்ளவர்களாக இருக்கிருர்கள்.

*"வாழ்க ராஜாஜி நாமம்"*



# ஏழை பங்காளர்

R. S. ஆறுமுகம், (Ex. M. P.)

தகுதி, திறமை, புத்திசாலித்தனம், நேர்மை, நிர்த்தாட்சண்யம், துணிச்சல், மேதாவிலாசம், சாணக்கியம், ராஜதந்திரம் இவற்றின் ஒட்டு மொத்தமாக விளங்கிய உலகின் தலைசிறந்த தலைவர்களுள் ஒருவர் ராஜாஜி. எதிர்நீச்சலிலேயே வாழ்க்கையைத் தொடங்கியவர் ராஜாஜி. சனாதனம் மேலோங்கி கொடிகட்டிப் பறந்த அந்தக் காலத்தில் ஹரிஜன முன்னேற்றம், ஆலயப்பிரவேசம் ஆகியவற்றில் மிகத்தீவிரம் காட்டியவர் ராஜாஜி. கொண்ட கொள்கைக்கும், செய்யும் பிரசாரத்திற்கும் எடுத்துக் காட்டாக விளங்க தனது வீட்டிலேயே ஒரு ஹரிஜனை வேலைக்கு வைத்து புரட்சி செய்தவர் ராஜாஜி. அதுமட்டுமல் லாமல், சகல ஜாதியினரும் அருந்தும் தண்ணீர் குழாயை திறந்து வைக்கும் வேலைக்கு ஒரு ஹரிஜனையே நியமித்தார். ஹரிஜன் திறந்து கொடுக்கும் தண்ணீரை எல்லோரும் அருந்தட்டும் அதன் மூலம் தீண்டாமை ஒழியட்டும் என்று செயல்பட்டவர் ராஜாஜி. ஜாதி இந்துக்களினால் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டது பற்றி கிஞ்சித்தும் கவலைப்படாமல் தொண்டாற்றியவர் ராஜாஜி.

தெய்வ பக்தியும், தேச பக்தியும் ஒருங்கே அமையப் பெற்ற சுதந்திர போராட்ட வீரர் ராஜாஜி. அவரின் அறிவுத்திறமை சிந்தனைசக்தியும் - தியாக மனப்பான்மையும் அவரை இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் பதவிக்கு உயர்த்தியது. கவர்னர் ஜெனரல் என்பது இந்தியாவின் மிக உயர்ந்த பதவியாக இருந்தாலும் தமிழ்நாட்டு மக்களின் மீதுதான் அவருக்கு அளவற்ற பற்றுதலும் பாசமும் இருந்தது.

"இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருப்பதைவிட தமிழ் நாட்டின் முதலமைச்ச ராக இருப்பதையே நான் பெரிதும் விரும்புகிறேன்" என்று கூறியதன்மூலம் தன் அபி மானத்தை வெளியிட்டவர் ராஜாஜி. ஏழைகள் தாழ்த்தப்பட்ட மக்களின் நலன் கருதி மதுவிலக்கில் தீவிரம் காட்டியவர் ராஜாஜி. பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் கொண்டு வந்ததன்மூலம் விவசாயிகளுக்கு சட்டத் துணை அவசியம் என்பதை நாட்டுக்கு அறிவித்தார். அத்துடன் விவசாயிகள் கடன் நிவாரண சட்டத்தையும் கொண்டு வந்தார். ராஜாஜியிடம் அறிவு பூர்வமான ஆக்க சிந்தனைகள் ஆயிரமாயிரம் உண்டு.

1971ல் சென்னை கடற்கரையில் பெருந்தலைவர் காமராஜுடன் மூதறிஞர் ராஜாஜி லட்சக்கணக்கான மக்களின் முன்னிலையில் தோன்றிய அற்புதக் காட்சி இன்னமும் என் நெஞ்சைவிட்டு நீங்கவில்லை. அந்த அமரர் ராஜாஜியின் சிந்தனைகள் செயலாகட்டும் அவரின் கனவுகள் நனவாகட்டும் அதன் மூலம் இந்த நாட்டிலும் நாட்டு மக்களின் நல்வாழ் விலும் சுபிட்சம் மலரட்டும்.

வாழ்க ராஜாஜி நாமம்! வளர்க அவர் தம் சிந்தனைகள்!

# இராஜாஜியின் கருத்துக்கள்

தொகுத்தளித்தவர்: **எஸ் ஏகநாதன்**

இசையும் பொருளும் பக்தியும் மூன்றும் கலந்தால் தான் மனம் உருகும். பக்தி என்ற ஏணியில் ஏற இசைவேண்டும். இசையில்லாத பாட்டு சங்கீதப் பரீட்சையில் 'மார்க்' வாங்கத்தான் பயன்படும்.

அச்சத்தை அகற்றி அனைத்திலும் விலையுயர்ந்த தர்மத்தைக் காப்போமாக. நமது அச்சத்தை நீக்க காந்தி அடிகள் ஆயுள் முழுதும் முயன்றார். பாரதியும் அதற்காகப் பாடிப் பாடி ஆயுளைக் கழித்தார். எனவே அச்சம் வேண்டாம் அதுவே மந்திரம்.

  

நீண்ட நெடுங்காலமாக இந்நாட்டு மக்கள் அனைவர் உள்ளத்திலும் பதிந்து வேர் ஊன்றிவந்த தருமமானது அழிந்து விடாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டியது நமது கடமை. பணப்பேயானது தருமத்தை அழிக்கும்போது அதைப் பார்த்துக்கொண்டிருக்கும் வீரியமற்ற வாழ்க்கை நமக்கு வேண்டாம். தர்ம விரோதிகள் நமது புனிதப்பண்பாடுகளை நாசம் செய்கின்றனர் என்பதைத் தெரிந்த பின்னரும் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பது ஏன்? தருமத்துக்கே எனது வாக்குரிமை என்று சூளுரைக்க வேண்டும். அறத்துக்கும் ஆன்மீக விடுதலைக்கும் உங்கள் வோட்டுரிமையை பயன் படுத்துங்கள்.

# RAJAJI

S. SRINIVASA AYENGAR MALT

He was Rajaji for most of us though he is better known in official circles as C. R. He was one of those great revered leaders who was respected by all and in these days of shabby, shoddy politics he was one who was known for his utmost integrity and sterling irreproachable character. When many names who appeared on the arena of Indian politics may disappear in dim oblivion his will stand as Mt. Olymbus. He made political enemies because of his forthrightness and conviction. Even those who didn't like him never questioned his integrity.

Rajaji was a multifaceted man. He was a lawyer, politician, philosopher, patriot, educationist and statesman all rolled into one. Besides his great contributions in these fields he was an eminent scholar having well read English, Sanskrit and Tamil. What he has done in other fields cannot compare with his literary works whether Tamil or English. He had his own style, simple at the same time weighing and in all his writings he infused the ancient wisdom of the land. His masterly treatment of the Gita. The Ramayana which he named Chakravarthi Thirumagan (CR was indeed a Chakravarthi Thirumagan whose family earned the name "Nallan" Chakravarthi for a great act of sacrifice and refinement) The Mahabharatha, The Upanishads and the Kural are monumental contributions. In all these any ardent student can see the hall mark of CR. Even here he never minced matters and was never afraid to give out his own opinion. For example in his Ramayana, in the controversial killing of vali, CR does not follow the orthodox view but concedes that Rama, the man has committed an error. His short stories which are full of morals must be read by young and old alike. In a story he laughs at the hypocrisy of the old people and suggests why we should not be children for ever so that the world may be innocent and childlike in its dealings.

One instance would do to show his practical wisdom. It was 1943 if I remember right. India was in the throes of Quit India Movement with her leaders in jail and the British at its highest. Then CR presided over our School 'Old Boys' function at Karaikudi. This was possible thanks to Sri Sa. Ganesan, a good friend of CR In that meeting I had to propose to toast for the country and CR had to respond from the chair. In passing I mentioned of about the reserve that was with England in India's name as if it was our favourable position. CR in his reply pointed out the obvious illusion because he said that we cannot get money transferred and if at all for the money that was to our credit. We can atleast get that country's labour transferred in the form of goods. It was a home truth which touched me quick.

One can write and write about CR. He was like an iceberg, only a little part being known, the major part being under the sea He never liked panfare of publicity as some of his contemporary politicians did. He was a Stitapragna He held almost all high offices in India and in his last days he lived the life of a recluse in Kilpauk, Madras. In order to salvage Indian politics from quota-permit Raj which brought in a lot of corruption at its wake he founded the swathanthra party and the whole India felt it moral force in his life time. In a world of rudes, the dressed man is an anathema; so it happened with Swathanthra party after CR has gone into the unknown.

I conclude "when such a one comes".



# My Rajaji

S. XAVIER, B. A., B. L.
(Ex. Member of Parliament)

In 1959 that Rajaji with his innate, usual undaunted courage and conviction, appealed to the leaders of the Country to start a movement to check the unbridled powers of the State and assert the liberty of the individual. His clarion call gathered momentum. All right-thinking people rallied round the banner that the venerable leader carried forward.

This movement of asserting individual liberty of the citizen against the onslaught of the State was aptly named as "SWATANTRA PARTY"

The first convention of the Swatantra Party was held in the Nellai Sangeetha Sabha in 1959. Rajaji presided over the function.

The First National Convention of the Swatantra Party was held at Patna in 1960. It was in this convention that the party officially adopted its Constitution. Great leaders like K M. Munshi, Menon, Modi, N. G. Renga. M. R Masani, N. Dandekar, Kalki Sadasivam. G K. Sundaram, Chitra Narayanaswami. Sa Ganesan, Dr. M Santosham gathered round Rajaji The Party took deep and firm roots and grew in leaps and bounds throughout the length and breadth of the Country.

Rajaji was specially honoured and respected by Kalki Sadasivam and Mr. G. K. Sundaram who were the two pillars of the Party in the State.

When the General Election came in 1967, the Swatantra Party decided to contest the election.

I went to Kalki office and saw Mr N. Dandekar, a retired I C. S. officer. From his remarks, I understood that he was pleased with my candidature

After some months. I was directed to nurse the constituency and I toured the entire constituency for about four months and paved the way for my success in the election.

As the general election was fast approaching some persons of our district approached Rajaji and offered as candidates with big sums of money. I understood that these persons had represented to Rajaji that I was a new entrant to politics, that I had no money for the election and that Tirunelveli was a general seat and the most important constituency in the district and that the Caste Hindu people might not like me. But it was here that Rajaji showed his mettle as a lover of honesty and integrity. He would not budge

an inch. All the efforts of these presons were of no avail. Rajaji wired to the Head office in Bombay to confirm my candidature and issue official orders.

Only Rajaji, in the whole country, could have taken this unique, bold and noble step of selecting a Christian for a general seat with no previous political background and with no resources for the election This action of Rajaji was ample proof that he was above all caste and religious prejudices I can never, in my life, forget this.

The election came in 1967 and I contested the Tirunelveli M. P. seat. Rajaji evinced special personal interest for my success.

In the election I was elected To my knowledge, unlike the present day socalled political leaders, Rajaji has never declined to grant interview to anyone. His nature is to give regard and respect to the lowest human being and give a patient hearing.

Another great feature of Rajaji's treatment of the people is to reply to all letters and petitions addressed to him, unlike the present day politicians.

It has become the fashion for all big personalities to sign as illegibly and as shortly as possible. But Rajaji used to put his signature in all letters most legibly and fully as "C. Rajagopalachari" even in his last days. This I just say because it shows his simplicity and humility and nobility

Having enjoyed Rajaji's affection, patronage and the respectful treatment for about five years in my political career, it has become impossible for me to be in any other political party, though I tried to be and hence I am not affiliated to any political party now.

The whole world have professed Rajaji to be a person of great wisdom and political insight and undaunted courage and conviction and as an ardent lover of God His world mission for the cause of world peace has been greatly appreciated by His Holiness Pope John XXIII and the President Mr. Kennedy and other rulers of the western countries

It is no exaggeration to say that Rajaii is the brain and the political prophet of India. It will be only in the fitness of things that the country will do well to cherish the memory of Rajaji in all possible ways as one of the greatest sons of the soil

No doubt that Rajaji reigns in the hearts of all those who had occasion to come into contact with him; and this is very much true in my case. My parents educated me; but Rajaji made me a man known to the people. As a token of my gratitude I am every day praying to God for the repose of the soul of Rajaji.

May his greatness live long and may his soul rest in eternal peace.